சங்க நூற் செய்திகள் :

# அறப்போர் ஆற்றிய ஆன்றோர்கள்

புலியூர்க் கேசிகன்

அருணா பப்ளிகேஷன்ஸ்
தியாகராயநகரம் :: சென்னை-17

# பதிப்புரை.

தமிழராகிய நமக்குப் பிறருக்குக்கிடையாத ஒரு சிறந்த செல்வச் சுரங்கம் கிடைத்திருக்கிறது. அது, செழுந்தமிழ்ச் சங்கச்சான்றோர் அளித்துச் சென்றிருக்கும் ஒப்பற்ற நூற்களாகும். அந் நூற்களைக் கற்கக் கற்கக் கற்குந்தோறும் கற்குந்தோறும் புதுப்புதுப் பொருள் நயங்கள் தோன்றி நம்மைப் பெருமிதத்தில் ஆழ்த்துகின்றன. அங்ஙனம் கற்கும் முயற்சிக்கு உறுதுணையாகச் சங்க நூற்கள் குறிக்கும் செய்திகளைப்பற்றிச் சில நூற்கள் வெளியிட எண்ணினோம். அந்த எண்ணத்தின் முதன் மலர்ச்சியே இந்த நூல்.

'அறப்போர்' என்ற கருத்து சங்கச் சான்றோர்கள் மேற்கொண்டிருந்த ஒன்றுதான் என்பதனை, அவர்களுட் சிலர் ஆற்றிய அறப்போர் நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுவதன் மூலம் இந்நூலின்கண் ஆசிரியர் புலியூர்க் கேசிகன் தெளிவுபடுத்துகின்றார். இந்த நூலினைத் தொடர்ந்து, சங்கச் செய்திகள் பற்றிய மேலும் சில நூற்களையும், புதிய கண்ணோட்டத்துடன் அவர் விரைவில் அளிக்கவிருக்கிறார். தமிழ் அன்பர்கள் இந்த வரிசையினை விரும்பி வரவேற்றுத் தமிழினத்தின் சிறப்பினைப் போற்றி மேற்கொள்வார்கள் என நம்புகின்றோம்.

பதிப்பகத்தார்.

## இந்த நூல்...

உலக வாழ்விலே, மனித இனத்தை எடுத்துக் கொண்டோமானால், அதன்கண் இரண்டு வகையான ஆற்றல்கள் குடிகொண்டிருக்கக் காணுகின்றோம். ஒன்று உடல் வலுவால் விளங்குவது; மற்றொன்று உள்ள உறுதியினால் அமைவது. இந்த இரண்டுவகை ஆற்றல் களும் கொண்டோராக நம் முன்னோர் விளங்கினர் என்ற சிறந்த உண்மையினைச் சங்க நூற்கள் நமக்குக் கூறுகின்றன.

உள்ளத்திலே நேர்மையும் தூய்மையும் உள்ளவன் ஒருவன், அந்த ஆத்ம சக்தியின் மூலம் உடல் வலுவிலே அவனினும் பன்மடங்கு பேராற்றல் உள்ளவனையும் எளிதாக வென்று விடுகின்றான். இங்ஙனம், உடல் வலுவினும் நுட்பமும் திடமும் உடையதாகத் திகழும் உள்ள உரத்தின் திண்மையே அறப்போர்க்கு அழியாத ஆதாரசக்தியாகும்.

உலக வரலாற்றிலே, பற்பல நாடுகளின் வரலாறுகளை யும் நாம் காண்போமானால் இடையறாத ஒரு போராட்டம் நமக்குப் புலப்படும். மக்களின் புறநிலைகளைக் காத்து வருவோனான மன்னனுக்கும், மக்களின் உள்ளத்தையும் அந்த மன்னனின் உள்ளத்தையும் ஆக்கிரமித்து விளங்கிய மதகுருவுக்கும் இடையே நிலவிய போராட்டந்தான்

அது. மன்னனா மதகுருவா? இவர்களுள் எவர் பெரியவர்? இந்தப் போராட்டம் இல்லாத நாடே இல்லை எனலாம்.

இந்த உலகப் பொதுநிலைக்கு மாறுபட்டதாகச் சிந்தனையாளர்களுக்கு, அறிவிற் சிறந்த சான்றோர்களுக்கு, மக்களின் அன்பிற்கு உரியவராயிருந்த ஆன்றோர்களுக்குத் தமிழகம் அன்றே பெருமையளித்துப் போற்றி வாழ்ந்திருக்கிறது. நாடாளும் பெருமன்னரும் நாவன்மை கொண்ட அந்த நாவலர்களின் சொற்களுக்கு மதிப்பளித்துப் போற்றி இருக்கின்றனர். போற்றியாக வேண்டியதொரு நிலையும் அன்று இருந்திருக்கிறது!

இவ்வாறு, மன்னனினும் மேலாக அறிவுடையோரை மதித்துப் போற்றுகின்ற மாண்பு 2000 வருடங்கட்கு முன்னரே விளங்கிய ஒரே ஒரு நாடு நம் தமிழ்ப்பெரு நாடேதான் என்று காணும்போது, நம் உள்ளம் பெருமிதத்தினாலே பூரிப்படைகின்றது.

'சிந்தனைச் சுதந்தரம்' என்ற குரல் அன்று தமிழகத்திலே முழங்கவில்லை. ஏன்? அன்று சிந்தனைக்குச் சுதந்திரம் மட்டுமன்று, மதிப்பும் இருந்தது. சிந்தனையாளர்கள் சாதிமத இனபேதமற்று, ஆண் பெண் என்ற வேறுபாடற்று, அரசர்களாலும் மக்களாலும் ஒருங்கே போற்றப் பெற்றிருக்கின்றனர்.

சிந்தனைச் சுதந்தரமும், பேச்சுச் சுதந்தரமும் மதத்தின் போர்வையையும் மழுங்கச்செய்து தலைசிறந்து விளங்கிய பொற்காலமே சங்ககாலம் எனலாம்.

அரசாளும் வேந்தர்களாயினும் அவர்கள் தம்முடைய அரசங்லே காரணமாக அநியாயமாக நடக்க முயன்ருல், மக்கள் அதனுல் அவதிப்பட நேர்ந்தால், அதனை எதிர்த்து அறத்தின் தகுதியைப் பேறுவதற்கு முன்னின்றனர் தமிழ்ச் சான்றோர்கள். மன்னனுக்கு அஞ்சியோ அல்லது தமக்கு வரும் துயருக்கு மனங்கலங்கியோ அவர்கள் வாளா விருந்து விடவில்லை. அறத்தின் துணையுடன், அறிவின் ஆற்றலுடன், அரசனை, அவனது தீயநெறியினைக்கண்டித்து உரைத்துத் திருத்தும் துணிவும் தியாக நெஞ்சமும் அவர் களிடம் நிலவியதனை நாம் காண்கின்றோம்.

மகாத்மா காந்தியடிகளின் அறப்போர் நிகழ்ச்சிகளைக் கற்கும்போது தமிழ்ச் சான்றோர்களின் பண்டை நாளைய அறப்போர் நிகழ்ச்சிகள் என் உள்ளத்தே எழுந்து கொண் டிருந்தன.

புதிய கண்ணேட்டத்துடன் அந்த வரலாற்றுச் செய்தி களைக் கண்டு, அதனைத் தமிழ் அன்பர்களுக்குப் படைக்க முயன்றிருக்கின்றேன். இதனை அனைவரும் விரும்பி வரவேற்றுக் கற்று இன்புறுவர் என்று நம்புகிறேன்.

புலியூர்க் கேசிகன்

# பொருளடக்கம்

# 1. அறப் போர்

உலகத்து அறிஞர் பெருமக்கள் அனைவரும், 'மக்கள் இனத்தவர்கள் ஒருவருக்கொருவர் தமக்குள் போரிட்டுக் கொண்டிருப்பதை எங்ஙனமேனும் அறவே நிறுத்திவிடுவதற்கு வகைசெய்ய வேண்டும்' என்று, பெரிதும் பாடுபட்டுக் கொண்டிருக்கின்றனர். தமக்குள் ஏற்படுகின்ற வேறுபாடுகளை, ஒவ்வொரு நாட்டினரும், தத்தம் அண்டை நாட்டினருடன் பேசித் தீர்வுகாண முயல்வதே சிறந்த பண்பாகும். அங்ஙனமன்றித், தாம் வலிமையுடையவர் என்ற நிலைமையினாலே, வலிமையற்றவரை அழித்து வெற்றி கொண்டு தம்எண்ணங்களை நிறைவேற்றிக்கொள்ளுதற்கும், தம் வேறுபாடுகளுக்கு முடிவு காண்பதற்கும் முயல்வது அறிவுடைமை ஆகாது. இந்த எண்ணம் இப்பொழுது எங்கும் வலுப்பெற்று வருகின்ற சிறப்பினை நாம் காணுகின்றோம்.

போர்வலிமை பெற்றுள்ள பெருநாடுகள் கூடப், போரினால் விளைகின்ற அழிவுப் பெருக்கங்களை எண்ணி அஞ்சுகின்றன. போரே ஏற்படாதபடி நிலையாகத் தடுப்ப

தற்கும், அந்தச் சூழ்நிலையிலும் தம் பெருமைக்குக் குறைவு ஏற்பட்டுவிடாதவாறு காத்துக் கொள்வதற்கும், அவை இடையறாது முயலுகின்றன.

'இவர்களின் நல்லெண்ணம் வெற்றியடைய வேண்டும்' என்று, விரும்புகின்றோர் பலர். ஆயினும், சொந்த நலன்களையும் செல்வாக்குகளையும் எண்ணத்திற் கொண்டவர்களாக நாட்டினர் பலரும் அமைந்திருப்பதனால், இந்த நிலை செயலளவிலே உருப்பெற்று வருகின்ற காலம், கடந்து போய்க்கொண்டே இருக்கிறது.

போரே ஏற்படாது தடுக்கும் ஆர்வத்தின் கதை இவ்வாறுதான் உலகில் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. இனி, உலக வரலாற்றினை நாம் சிறிது ஆராய்வோமானால், அது முற்றவும் போர்களின் வரலாறுகளாகவே அமைந்திருக்கக் காணுகின்றோம்.

ஒவ்வொரு நாட்டின் வரலாறும், நாகரிகமும், போர்களினாலேயே உருவாக்கப் பெற்றிருக்கின்றன. மனித இனத்தினுள்ளே, ஒன்றையொன்று கொன்று குவித்து, அழித்து, வெறிகொண்டு வெற்றி கொண்டாடிய கதைகளாகவே நாட்டு வரலாறுகள் பலவும் விளங்குகின்றன.

இவ்வாறு, 'போர்! போர்!' என்று மக்களினம் முழங்கிக்கொண்டு, ஒன்றை யொன்று கொன்று குவித்துக் கொண்டிருந்த காலத்தினும், போரின் அழிபாடுகளைக் கண்டு மனமுருகிப், போரினை நிறுத்தவும் ஒழிக்கவும் முயன்று வந்தனர் ஆன்றோர் பலர்.

'ஒருவர் ஒருவரைக் கொன்று அழிப்பதே வெற்றி' என்று கருதும் போர்கள் எல்லாம், 'மறப்போர்கள்' ஆகும்.

அங்கே, படை அளவிலே 'வல்லான்' வெற்றி பெறுவான். அவன்பால் அறம் நிலவவேண்டும் என்பதில்லை. அவன் முடிவு அறமற்றதாயினும், அவனுடைய போரின் வெற்றியே அவன் முடிவைஅறமாக வலியுறுத்திவிடுகிறது. உடல்வலுவும் படைவலுவும் கொண்டு போரிட்டு முடிவு காணும் இத்தகைய மறப்போர், எங்கும் எந் நாட்டகத்தும் எக்காலத்தும் நிகழ்ந்தனவே யாகும்.

ஆனால், இந்த மறப்போரினும் மாறுபட்டதாக, 'அறப் போர்' என்ற ஒன்றும், உலக வரலாற்றேடுகளின் இடையிடையே தோன்றி, நம் நினைவைக் கவர்கின்றன. 'அறப் போர்' என்பது, அறத்தினைப் பேணவேண்டும் என்னும் அயராத உறுதியினால்மட்டுமே, ஒருவரோ பலரோ மேற்கொள்ளும் போராட்டம் ஆகும்.

மறப்போர் செய்வார்க்கு, எதிர் நிற்பாரின் படை வலுவும், போர்வன்மையும் முதன்மையாகக் கருத வேண்டியனவாகும். இவற்றில் மிகுதி உடையோர்பால் வெற்றியும் உறுதியாகும். ஆனால், அறப்போரின் நிலைமை இவ்விதம் அமைந்ததொன்று அன்று. அறப்போர், 'உண்மை' என்ற ஒன்றின் உறுதியினால், அதனைக் காப்ப தற்காக மேற்கொள்ளப்படும் போராட்டமாகும். உண் மையின் வலு எவ்வாறுள்ளது என்பதுதான் இப்போரின் கண் முதன்மையாக எண்ணி ஆராயப்பட வேண்டுவதே அல்லாது, எதிரிகளின் படைபெருக்கப் பணப்பெருக்கங்கள் அன்று.

இந்த அறப்போரின் உண்மையான தன்மையை உலகுக்கு நன்றாக விளக்கிக் காட்டியவர், இந்த நூற்

ருண்டிலே, நம்முடன் வாழ்ந்திருந்து மறைந்தவரான பெரியார் காந்தியடிகளே ஆவர்.

ஆங்கில அரசின் படைவலுவும், பிறவும், அவர் உள்ளத்தே அச்சம் விளைவிக்கவே இல்லை. அவர் உள்ளம் உண்மையின் உறுதி ஒன்றினையே தனக்கு உறுதுணையாகக் கொண்டிருந்தது. 'உண்மைக்கு எதிராக எத்தகைய பிற வன்மைகளும் செயலற்றுப்போகும்' என்பதனை, அவர் மிகவும் தெளிவாகவே அறிந்திருந்தார்.

காந்தியடிகள் அறப்போர் நெறியினைக் கைக்கொண்ட பின்னரே, இன்று நாம் பயன் கொள்ளும் உரிமைநிலையும் நமக்கு எளிதாக வந்து வாய்த்தது எனலாம்.

காந்தியடிகளின் அறப்போர், இருபதாம் நூற்றுண்டின் வரலாற்றுப் போக்கையே மாற்றுவதற்குத் துணை செய்தது. 'போர்வலுவின் துணையினைக் காட்டிலும், அறத்தின் துணைக்குத்தான் வலிமை மிகுதி' என்ற அழியாத உண்மையினைக், காந்தியடிகள் நன்ருக விளக்கி, அதன் மூலமே நமக்கு வெற்றியும் தேடித் தந்தனர்.

காந்தியடிகளின் வரலாற்றைப் போலவே, அறப்போர் ஆற்றிய பெருமை உடையதாகத் திகழ்வது, திருநாவுக்கரசுப்பெருமானின் வரலாறும் ஆகும். அப்பெரியார், தமக்குக் கொடுமை செய்த மன்னனின் செயல்களை எல்லாம், எதிர்த்துப் புன்சிரிப்புடனேயே நின்ருர். அவனுடைய கொடிய அடக்குமுறைகளை எல்லாம், 'பொறுத்தல்' என்ற உயரிய பண்பினுலேயே பழுதுபட்டுப் போகச்செய்தார். பொறுமைக் கடலான அவர்

தாம் இறுதியில் வெற்றிபெற்றனரே அல்லாமல், அவரை அழிக்க முயன்ற மன்னனின் வன்மையால் வெற்றிபெற இயலாதுதான் போயிற்று.

இவ்வாறு, மறத்தின் மிகுதியான வன்மையினையும், தம்பாலுள்ள அறத்தின் உறுதியாலும், நேர்மையின் தகுதியாலும் வெற்றி கொண்டோரான சான்றோர்கள் பலராவர். அவர்கள் வரலாறுகள் நமக்கு ஓர் உண்மையினை நன்றாகவே தெளிவு படுத்துவனவாகும். அது என்னவென்றால், 'வலிமை என்பது, தசைவலுவும், போர்ப் படையினரின் ஆற்றலும் மட்டுமே அன்று; குறிக்கோளின் நேரிய தன்மையும், அதன்பாற் கொள்ளும் நிலைத்த உள்ள உறுதியுமே ஆகும்' என்பதே.

அறத்திற்காக, மறத்தினாலே மாண்புற்றுத் திகழ்ந்த வலிமையாளர்களைத் தன்னந்தனியே எதிர்த்து நின்று வெற்றியும் கொண்டோர் போற்றுதற்கு உரியவர். அத்தகைய, செயத்தகு செயல் செய்த சான்றோர்கள் நம்முடைய தமிழகத்தினும் முன்னாள் பலராக இருந்தனர் அவர்கள் செய்த வியத்தகு செயல்களுள் சிலவற்றைத் தொகுத்துக் கூறுவதன் மூலம், அனைவரின் உள்ளங்களினும், உண்மைக்கும் நேர்மைக்குமே உயரிய இடமளிக்கும் இயல்பு மலருமாறு செய்தல் வேண்டும். இந்த ஆர்வத்தை ஒருவாறேனும் நிறைவேற்ற முயல்வதே இந்த நூலின் நோக்கமாகும்.

உண்மைக்கு அழிவு இல்லை; அதனைப் பேணுபவர்கள் குறைந்த தொகையினராகவும் இருக்கலாம்; அதற்கு மாறுபட்டோர் தொகை பெரிதாகவும், அவர்களின் வலிமை

மிகுதியாகவும் காணப்படலாம்; எனினும், இறுதியில், உண்மையே வெற்றிபெறும்; நேர்மையே நிலைத்து நிற்கும்; உயர்ந்த சிந்தனைகளே வலுப்பெறும். இதனை யாவரும் அறிதல் வேண்டும்.

இதன்கண் எடுத்துக் கூறப்பெறும் வரலாறுகள் அனைத்தும், செழுந்தமிழ்த் தாயின் செல்வச் சுரங்கங்களாகத் திகழ்கின்ற, இலக்கியங்களுள் காணப்படுவனவே. அவற்றின்கண் காணப்பெறுகின்ற நிகழ்ச்சிகள், ஒருவாறு சுவையான கதைப்போக்கு முறையிலே, இந்நூலின்கண் விளக்கம் பெறுகின்றன.

நம் முன்னோர்களாக விளங்கிய அச் சான்றோர்களின் அறப்போர்களும், அவர்களின் அறப்போர்கள் வெற்றி அடைவதற்குக் காரணராக விளங்கிய மறப்போர் மன்னர்களும், நம்முடைய முன்னோர்கள் என்று நாம் அறிதல் வேண்டும். அந்த அறிவு, நம்பாலும் நல்லறிவின் செழுமையினையும், நல்லறநெறி நிற்கின்ற வலிமையினையும் தந்து, நம்மையும் உயர்வுறச் செய்யும்.

உயர்வு பெறுவதற்கு உள்ளத்தில் அமைகின்ற உயரிய பண்புகளே காரணமாகும். அத்தகைய சிறந்த பண்புகள் நிலைபெறுவதற்கு, உள்ளத்து உயர்வினாலே உயர்நிலை பெற்ற உத்தமச் சான்றோர்களின் வரலாறுகள் பெரிதும் துணை செய்வன. அவற்றின்கண், இனி, நாம், நம் கருத்தினைச் செலுத்துவோமாக.

# ௨. வரி மறுத்த உழவர்

அருள் முனிவரான காந்தியடிகள், நம் நாட்டினின்றும் ஆங்கில ஆட்சியை அகற்றிவிட வேண்டுமென்பதற்காகப், பற்பல அறப்போர்களை நடத்தினார்கள். அவற்றுள் ஒன்று 'வரிகொடா இயக்கம்' என்பது. வரி கொடாமை, ஆதிக்கஞ் செலுத்திவரும் அரசிற்கு எதிராக, மக்கள் தம்முடைய உரிமைக்குரலை எழுப்புவதாகும். அரசு, மக்களின் உரிமையைப் பறித்து, எல்லோரும் அதற்கு அடிமைகள், அதன் ஏவலுக்கு அடங்கிப் பணிந்து வாழ வேண்டியவர்கள் என்றெண்ணிச் செருக்குற்று, அளவு கடந்து அறமற்ற செயல்களுள் ஈடுபடும்போது, அதனை அறநெறிச் செலுத்துவதற்கு மக்கள் அனைவரும் போரிடு கின்றார்கள். அத்தகைய உரிமைப்போர்களுள் ஒன்றுதான் வரிகொடா இயக்கம் என்பதனை நாம் நன்றாக அறிவோம்.

'வரி மறுத்தல்' என்ற போராட்ட மரபு உலகிற்குப் புதுமையாகவே தோன்றிற்று. அமைதியான எதிர்ப்புக் குரல் என்றாலும், அரசின் அடக்குமுறைகள் அன்றும் மலிந்தன. வற்புறுத்தி வரியினை வாங்கும் பல கொடிய

முறைகளை அரசு கைக்கொள்ளவும் அந்நாள் முயலாமல் இல்லை. எனினும், இறுதியில் வெற்றி மகாத்மாவுக்கே வந்து வாய்த்தது. உண்மைக்கு அழிவும் இல்லை; தோல்வியும் கிடையாது. இந்த நியதி காந்தியடிகளின் வரிகொடா இயக்கப் போரினுக்கும் பொருந்துவதாயிற்று. அத்தகைய பல அறப்போர்களின் பயனுற்றுன், இன்று நாம் உரிமை பெற்ற குடியரசின் மக்களாக, உலகத்து நாடுகளின் நடுவே செம்மாந்து சீருடன் திகழ்ந்து வருகின்ருேம் என்பதை, முன்னரே சொன்னேம்.

ஒரு நாடு வளமுடையதாக இருப்பது ஒன்றே அதனுடைய நல்வாழ்விற்கு முற்றவும் உதவுவதாகி விடாது. நாட்டின் வளம் அந்நாட்டு மக்களுக்கு முறையோடு பகுக்கப்படவும், நாட்டின் பொதுவான சிறப்புக்கு உதவியாகப் பயன்படுத்தப் படவும் வேண்டும். அப்போதுதான், அந்நாடு சிறக்கும்.

மக்களனைவரும் ஒரே நிலையான மனப்போக்கு உடையவரும் அல்லர். மக்களின் மனப்போக்குகளின் தனித்தன்மைகள் பல்வேறு வகையினவாகவே அவர்களைப் பகுத்துக்காணத் தூண்டும். நாட்டின் பொதுநிலை உயர்வினைப் பேணுவதற்கு, இந்தத் தனிமனிதத் தன்மை வேறுபாடுகள் பொறுப்புடன் கண்காணித்து வரப்பெறுதல் வேண்டும்.

நாட்டினுக்கு உள்ளே வாழும் மக்களை எல்லாம் இவ்வாறு அறநெறி நிற்பவராகக் கண்காணிப்பதுடன், நாட்டினைப் புறப்பகை ஏதும் சூழ்ந்து அழித்துவிடாதவாறும் காத்தல் வேண்டும்.

இத்தகைய பொதுப்பணிகளை மேற்கொள்வதற்கு 'அரசு' என்று சொல்லுகின்றோம். அரசின் தலைமைக்கு வருபவர்கள், வருகின்ற மரபுகள், அவர்களின் உரிமைகள், ஆகியவற்றில் காலத்திற்குக் காலம் வேறுபாடுகள் பல நிலவலாம். ஆனால், அரசின் பொறுப்புக்களும், கடமைகளும், அமைதிகளும், எக்காலத்தும் ஒரு தன்மைத்தாகவே விளங்கி வருபவைகள் தாம்.

இந்த வகையிலே, நம் தமிழகத்து மக்களின் நலன்களைப் பேணும் பொறுப்பேற்றிருந்த அரசுகள், சங்க காலத்திற் பலவாக இருந்தன. சிறுசிறு நிலப்பகுதிகளைக் காத்து வந்தவர், 'குறுநில மன்னர்கள்' என்று குறிக்கப் பெற்றனர். பெருநிலப் பகுதிகளுக்கு உரிமையும், பழைமையான வழிமரபும் கொண்டிருந்தோர், மூவேந்தர் என்று விளங்கினர்.

'சேரர் சோழர் செழுந்தமிழ்ப் பாண்டியர்' என்ற, அம் மூவேந்தர்களும், அந்நாளைய தமிழகத்தை வளமார் பெரு நாடாகவும், வன்மையிலே செறிவுற்ற திருநாடாகவும், வண்மையிலே புகழுற்ற அருள் நாடாகவும், அறிவின் செழுமையிலே நிறைவுற்ற நன்னாடாகவும், பொறுப்புடன் பேணி வந்தனர். இந்தச் செய்திகளைச் சங்கப் பெருநூல்கள் பலவும், சான்று பகர்வனபோல், நமக்கு எடுத்துக் கூறுகின்றன.

அம் மூவேந்தர் நாடுகளுள் சோழ வளநாட்டின்கண் நிகழ்ந்ததே இந்த வரிகொடா இயக்கமாகும். அதனை நிகழ்த்தியோர் ஓர் எளிய உழவர். அவர் நிகழ்த்திய போரோ சோழநாட்டு மன்னனுக்கு எதிராக! அந்த உரிமைப்போரின் செய்தியை இனிக் காண்போம்.

'வான் பொய்ப்பினும் தான் பொய்யாத வளமுடைய காவிரிப் பேரியாறு பாய்ந்து, வேலி ஆயிரமாக விளைவைப்' பெருக்கி, வளம் நிறைத்து வந்த சோழநாட்டினை, ஒரு காலத்தே ஆண்டுவந்தான் கிள்ளி வளவன் என்னும் பெயருடையான், ஒரு பேரரசன். இவன், தன் காலத்துத் தமிழக மன்னர்கள் பிறரினும், போராற்றலாலும், நாடு புரக்கும் அறநெறிப் பண்பாலும் சிறப்புற்றோனாக, வலிமையுடன் விளங்கி வந்தான்.

இவனுடைய, அறம் பிறழாத உறையூரின் அரசவை, ஆன்றோர் பெருக்கினை உடையதாகத் திகழ்ந்து வந்தது. புலவர் பெருமக்கள் பல்லோராலும் புகழ்ந்து பாடப் பெற்ற புகழ் மிகுந்தோனாகவும் இவன் திகழ்ந்துவந்தான். இவனுடைய சிறப்பினைப்பற்றிப் பாடிய புலவர்கள் கோவூர் கிழார், ஆவூர் மூலங் கிழார், ஆலத்தூர் கிழார், மாறோக்கத்து நப்பசலையார் முதலியோராவர். அவர்களுடைய பொய்யா நாவின் பொன்னுரைகளாற் பொலிவுற்ற செய்யுட்களிலே, இவன் நீங்காத நெடும்புகழ் பெற்றோனாக, நின்று நிலவுகின்றான்.

இரத்தி நீடிய அகன்தலை மன்றத்து
கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி,
அமலைக் கொழுஞ்சோறு ஆர்ந்த பாணர்க்கு
அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்,
எம்கோன், வளவன் வாழ்க! (புறம் 34)

என்று, இவனுடைய பெருமையை வாயாரப் போற்றுகின்றார் ஆலத்தூர் கிழார் என்னும் புலவர் பெருமான். தன்னைப் பாடிவந்த பாணர்க்கு நீங்காத பெருஞ்செல்வம் அளித்த வள்ளன்மை உள்ளம் உடையவன் கிள்ளிவளவன்;

அவன் புகழைத் தாம் பாடாதிருந்தால் அது செய்ந்நன்றி கொன்ற தன்மையாகும் என்று குறித்து, அவனைப் பாடுவது தமது கடமை எனவும், அவர் உரைக்கின்றார்.

அவன் மிக்க படை வீ ர ர் பெருக்கத்தினையும் பெற்றிருந்தவன்; சேரர்க்குக் கோநகரான கருவூரை முற்றி வெற்றிபெற்றான்; கருவூர் முற்றுகையின்போது, இவனுடைய படைக்கு அஞ்சிச் சேரமான் கோட்டைக் கதவுகளை அடைத்து உள்ளேயே பலகாலம் கிடந்தான்; முடிவிலே, வெற்றி இவனுக்கே வந்து வாய்த்தது என்றும் நூல்கள் கூறும்.

இவனுடைய ஆ ற் ற ல் க ளை எடுத்துரைக்கும் மற்றொரு தமிழ்ச் சான்றோரான ஆவூர் மூலங்கிழார், என்பவர், "பெரும் படையினை உடைய ஆற்றல் மிகுந்த வேந்தனே! நீ சினந்து நோக்கும் இடங்களிலே எரி நெருப்புத் தவழும். நீ விரும்பிக் காணும் இடத்திலெல்லாம் அழகு மலரும். 'செம்மையான ஞாயிறு சென்று போவதாக' என நீ விரும்பினாலும், 'வெண் திங்களினுள்ளே வெயில் பிறப்பதாக' என நீ எண்ணினாலும், விரும்பியவாறே விளக்கும் ஆற்றலுடையவன் நீ. செய்த நல்வினையின் பயனாக இன்பம் நுகர்வதல்லது, உடையோர் கொடுத்தலாற் பெறுகின்ற கொடைமகிழ்வும், இல்லாதோர் இரத்தலால் அக் கொடைத்திறம் சிறக்குமாறு செய்தலும் வானகத்து இல்லாததாகும். அதனால், அது நின் நாட்டினும் சிறப்புடையதன்று" என்றெல்லாம், இவன் சிறப்பைப் போற்றுகின்றனர்.

இவன், சேரர் கோமானும், இமயத்தே விற்பொறி பொறித்த வல்லாளனுமாகிய பெருவேந்தனையும் வெற்றி

கொண்டவன். அந்த வெற்றிச்சிறப்பினை மாறோக்கத்து நப்பசலையார் என்னும் நற்றமிழ்ச் செல்வியார், மிக்க நயமுடன் பாடுகின்றார்; பாடிப் போற்றுகின்றார்.

"பெருமானே! புறவின் துயரினைத் தீர்த்தற்குத் தானே துலையேறி அமர்ந்தவன் நின் முன்னோன். அவன் வழி வந்தவன் நீயுமாதலினால்,'நீ கொடையாளன்' என்பது, நினக் கொரு புகழும் ஆகாது.

'பகைவர்கள், நினைப்பினும் நெஞ்சம் நடுங்கும் ஆற்ற லுடையவனாக விளங்கிய நின் முன்னோன் ஒருவன், தூங்கெயில் அழித்துச் சிறப்புற்ற புகழுடையவன். அவன் மரபினன் நீயாதலினால், 'போரிட்டு வென்றி அடைதலிலே வல்லாளன் நீ' என்பதும், நினக்குப் புகழ் தருவது அன்று.

வீரமிகுந்த சோழர்களின் உறையூர் அவை, 'அறம் என்றும் நின்று நிலைபெறுவது' என்ற நீங்காத புகழை உடையது. அதனால் 'நீ முறைமைசெய்து நாடு காப்பவன்' என்று கூறுவதும், நினக்கு ஒருக்காலும் பெருமை தருவ தன்று.

ஆனால், இமயத்தே வில் இலச்சினை பொறித்தோனாகிய சிறப்பினன் சேரன்; அவன் அழியுமாறு, வாடாத வஞ்சி யாகிய வஞ்சி நகரினை முற்றி அழித்தனையே! அந்தப் பெருமை கெழுமிய வலிமிகுந்த நின் திருவடிகளைப் போற்றிப் பாடும்பொழுது, எவ்வாறு புகழ்வோம் என்று அறியாது யான் நிற்கின்றேனே? அதுதான் பெரும! நினக்குப் புகழ் தருவது" எனவெல்லாம், பாடிப் பரவுகின்றனர்.

கிள்ளிவளவனின் போராற்றலைப் பிறரும் புகழ்ந்து பாடியுள்ளனர். "நின் புகழினைப் பாடுவோர் பொலிவு தோன்றவும், நின் இகழினைப் பாடுவோர் தலைவணங்கவும் இன்று கண்டோம். இஃதேபோல, என்றும் காண்போம்' என்கின்றனர், 'ஆலூர் மூலங்கிழார்' என்னும், அருந்தமிழ்ப் புலவர் பெருமான்.

"காலனுயினும், உயிர்களைக் கொன்று கவர்வதற்கு உரிய முடிவு காலத்தினைக் கணக்கிட்டுப் பார்த்துக் கொண்டிருப்பான். ஆனல், நீயோ, 'வேற் பெருக்கத்தினை யுடைய மாவீரர்களாகிய பகைவர் படையனைத்தும் அழிவதாக என விருப்பங்கொண்ட இடத்திலேயே, அவர் உயிரினைக் கவர்கின்ற ஆற்றலுடையவன்' என்று, 'காலனை விடக் கடுஞ்சினமுள்ள காவலன் இவன்" என்கின்றனர், கோவூர்கிழார் என்னும் மற்ருெரு புலவர்.

"நின் யானைகள் மலைகளைப்போலத் தோன்றும். நின் படைகள் கடல் போன்று முழக்கமிட்டு வரும். கூர்மை யான முனையுடைய நின் வேல்கள் மின்னலைப்போல ஒளி பரப்பும். புலியானது பேணிக் காக்கும் குட்டியைப்போல, மெலிவற்ற செங்கோலினனுக நீ நின் நாட்டினைக் காத்து வருகின்ருய். மலையினின்று இழிந்துவரும் பற்பலவான ஆறுகளும் முடிவிற் கடலிடத்தேயே சென்று அடைவது போலப், புலவர் எல்லோரும் பல்வேறு நாடுகளினின்றும் நின்னையே வந்து சேர்வர்" என, அவனுடைய திறத்தினை நாவார நவின்று, நல்லிசை முழக்கமிடுகின்ருர், நற்றமிழ்ச் சான்ருேராகிய இடைக்காடனூர்.

இங்ஙன மெல்லாம், புலவர் பலர் போற்றும் புகழாள ளுகவும், வெற்றி மிடுக்கிலே விளக்கமுடையோனுகவும், விளங்கி வந்தவன் கிள்ளிவளவன்.

அத் தகையோன் போர்களிலேயே மனஞ்செலுத்தி யோனாக விளங்கியமையால், அவனுடைய புகழ் நாற்றிசையும் பரவிற்று. எனினும், அத் தகையோனுடைய ஆட்சியிலேதான் நிகழக்கூடாத ஒன்றும் நிகழ்ந்தது.

நாட்டிலே மழைவளம் குறைந்து போக, ஆறுகளும் குளங்களும் வறட்சியுற்றுப் போய்விட்டன. நிலங்கள் உழவின்றிக் கிடந்தன. மக்கள் உழுதூண் பெருது ஒட்டிய வயிறினராக உழன்று நொந்தனர். "வறுமை நிலை நீங்காதோ? எம்முடைய வருத்தம் அனைத்தும் தீராதோ?" எனக், கண்ணீர்சோரக் கலங்கித் துடித்தனர். அவர்கட்கு உதவவோ, அவர்களின் துயரினைப் போக்கவோ, அரசப் பெருவாழ்விலே திளைத்திருந்த கிள்ளிவளவன் மனங் கொண்டானில்லை. அவனிடம், அந்த நிலையினைச் சென்று எடுத்துக் கூறுவதற்கும், அந் நாட்டுள் எவருக்கும் துணிவு பிறக்கவும் இல்லை.

விளைவு குறையவே, உழவர்கள் அனைவரும் தம் உள்ளத்து ஊக்கமும் குன்றியவராயினர். கூவலும் கிணறுகளும் உடையோர், மிக்க துயரத்தோடு, இரவும் பகலுமாக முயன்று, ஏதேதோ விளைத்துத், தம் பசிப்பிணியைப் போக்குவதற்கு முயன்று கொண்டிருந்தனர். "பாவலர் போற்றும் பாராளும் வேந்தன், இந்த அவலநிலைக்கு இரக்கங்கொண்டு உதவுதற்கு முன்வந்தானில்லையே?' என்று குமுறினர், மக்கள் அனைவரும்.

இத்தகைய நிலையிலேதான் அரசிறை வாங்குவோரின் கொடுமைகளும் அளவுகடந்து போகத் தொடங்கின. மன்னன் மேற்கொள்ளப் போகின்ற மற்றொரு பெரும்

போருக்காக, மட்டற்ற பொருள் வேண்டியிருந்தது. வரி வாங்குவோரை மன்னன் பொருளுக்கு நெருக்கினன். 'வரிப் பாக்கிகள் விழாமல், அனைத்தையும் வாங்கி விடுக' எனப் பணித்தான். அவர்களும் ஊர்களை நோக்கி, வரி வாங்குகின்ற உறுதிகொண்டோராக, விரைந்து சென்றனர்.

ஊர் மக்கள், உணவுத் தட்டுப் பாட்டினாலே தாம் கொண்ட துயரம் போதாவென்று, தம்மிடம் வரி வாங்குவோர் காட்டிய அளவற்ற கொடுமையான துயரங்களுக்கும் ஆளாயினர். அவர்கள் உள்ளம் குமுறிற்று. 'அறநெறி பேணவேண்டிய மன்னனின் ஆட்சியிலே, இத்தகைய அளப்பறியாக் கொடுமையும் நிகழ்வதோ?' என்று, கொதிப்படைந்தனர்.

மன்னனைப், புலவர்கள் பாராட்டிய பற்பல செய்யுட்களையும் கேட்டவர்கள் சிலரும் ஊர்களுள் ஆங்காங்கே இருந்தனர். அவர்கள், 'மன்னன், இங்ஙனம் கொடுமை செய்யுமாறு ஆணையிட்டிருக்கவே மாட்டான்; எல்லாம் இந்தப் பணியாளர்கள் செய்யும் கொடுமைதான்" என்று கூட நம்பினர்.

மக்களின் நம்பிக்கைகளும் முடிவுகளும் யாவையாயினும், அவர்களடைந்த வருத்தங்கள் குறைந்து விடவில்லை. நாட்டின்கண்ணே மக்களின் குமுறல் மிகவும் பெரிதாகிக் கொண்டே போயிற்று.

இவ்வாறு, சோழவள நாட்டின் நிலையானது, சொல்லுதற்கும் ஒண்ணாத் துயர நிலையிலேயே போய்க் கொண்டிருந்த காலத்திலே, 'மன்னனின், அந்த நேர்மையற்ற

அரசிறை வாங்கும் செயலினைத் தடுத்தாகவேண்டும்' என்று முன்வருபவர், எவரும் இலராயினர்.

"மன்னன் ஆற்றல் மிகுந்தவன்; படைவீரர் பெருக்கத்தினை உடைவன்; அவனுக்கு எதிராகப் பேசினால் நம்முடைய நிலைமை யாதாகுமோ?" என்று, அச்சம் கொண்டவராக, வேதனையையும் பொறுத்துக் கொண்டோ, அன்றிச் செத்தொழிந்தோ போயினர் பலர்.

இந் நிலையிலேதான், வெள்ளைக் குடி என்னும் ஊரிலேயுள்ள ஓர் உழவர் பெருமகன், பல ஆண்டுகளாகத் தம்முடைய வரிப்பணத்தைத் தருவதற்கு இயலாதவராக இருந்தனர். தண்டல் செய்வோர் அவரைக் கடுமையாகப் பணத்திற்கு நெருக்கினர். "ஊரவர் பலரும் கொண்டுள்ள துயரையும், தாம் படும் வேதனையையும் எண்ணிய அவர், அதற்கு ஒரு முடிவு காணவேண்டும்" என்று விரும்பினார்.

"எம்மால் வரி தருவதற்கு இயலாது. எம்மிடம் இருப்பதும் யாதுமில்லை. ஆகவே, எம்மைத் துன்புறுத்துவதனாற் பயனில்லை" என்று, தம் எதிர்ப்புக் குரலினை எழுப்பினார் அவர்.

தண்டல்காரர்கள் மிகத் திடுக்கிட்டனர். அவர்களின் சினமும் மிகுதி யாயிற்று. "நம் மன்னனின் ஆணைக்கு, எத்துணையோ நாட்டினர்களும் பணிந்து போகின்றபோது, இந்த உழவர், அதனை மறுத்து எதிர்க்கவும் துணிவதோ?" என்று குமுறினர், அவர்கள்.

'பெரியவரே! எதனையும் நன்றாக ஆராய்ந்து பேசுவதே அறிவுடைமையாகும். நீங்கள் இப்போது பேசுகின்ற

பேச்சினால் வரப்போகும் விளைவுகளை நீங்கள் அறிய மாட்டீர்கள். அது உங்கட்குக் கேடாகவே முடியும்" என்று; அவரைப் பணிந்து போவதற்குச் செய்யவும் முயன்றனர். அவரோ, தம் குரலினை ஊர் ஊராகச் சென்று பரப்புதற்குத் தொடங்கினார். அவருடைய பேச்சு மக்கள் உள்ளங்களிலே ஒரு புத்துணர்வை எழுப்பிற்று. அவர்கள் ஒன்று திரண்டனர். 'வரிக்கடன் ஏதும் தர மாட்டோம்" என்று, வரி வாங்குவோரிடம் உறுதியாகத் விட்டனர்.

தண்டல் தலைவனின் பாடு மிகவும் நெருக்கடியாயிற்று. "பஞ்சத்தின் காரணமாக, வரி தண்டுவதே பெரிய வேதனை யாக இருந்த நிலைமையிலே, எழுந்த எதிர்ப்பும் துணை சேர்ந்து கொண்டதானால், ஒரு காசும் பெயராதே?" என்று, அவன் கவலையுற்றான். தானே, அந்தப் பெரியவரைச் சென்று காண்பதற்கும் முடிவு செய்தான்.

அந்த உழவரின் பெயர் நாகனார் என்பது. அவர் உழு தொழிலோர் ஆயினும், உயரிய தமிழ்ப் புலமை உடை யோராகவும் திகழ்ந்தனர். அவரைக் கண்டதும், தண்டல் தலைவனின் உள்ளத்திலேயும், சற்று, அச்சம் ஏற்படத் தொடங்கிற்று.

'பெருமானே! நீங்கள், எல்லாம் அறிந்தவர்கள்; நீங்களே நம் மன்னருக்கு எதிராக இங்ஙனம் செய்தல் முறையாகுமோ? அதன் விளைவினை நீங்கள் கருதினால் நன்று' என்று, அமைதியாகவே, அவன், தன் பேச்சைத் தொடங்கினான்.

'தலைவ! நின் பணியின்மீதே நீ கருத்துச் செலுத்து கின்றாயே அன்றி, மக்கள் படுகின்ற பசித்துன்பம் நின் கண்ணிற்குப் புலனாகவில்லையே? பிற நாடுகளை வென்று கொள்வதும், அடிப்படுத்துவதும் மட்டுமே நாடு காவல் ஆகாது; நின் மன்னனிடமே இதனைச் சென்று உரைப் பாயாக. ஆகவே, நின் பேச்சுப் பயனற்றது' என்றனர் நாகனார்.

"தங்களைச் சிறையிட்டு மன்னர்பால் கொண்டு சென்று, தக்கவாறு தண்டனை வழங்கச் செய்யவும் என்னால் இயலும். பெரியவராயிற்றே என்பதனால், மீண்டும் தணிவாகவே கேட்கின்றேன். தங்கள் உள்ளத்து நினைவு களைத் தாங்கள் இப்போதே மாற்றிக் கொண்டால் நன்று" என்றனன் தண்டல் தலைவன்.

நாகனாரோ அவனுக்கு இசைய மறுத்துவிட்டார். வேறு வழி ஏதும் காணாத தண்டல் தலைவனும், அவரைச் சிறையிட்டுச் சென்று உறையூர் அவையிடத்தே கொண்டு ஒப்படைத்துவிட்டான்.

'அரசுக்கு எதிராக வரியினை மறுத்துப் ஒருவர்; அவர் ஒரு புலவர்' என்ற செய்தி, உறையூர்' அவையிடத்தே ஒரு பெரிய பரபரப்பையே ஏற்படுத்திற்று. கிள்ளி வளவனின் காதுகளுக்கும் அச் செய்தி சென்றது.

"அந்த எதிர்ப்பாளரை என்பால் அனுப்புங்கள். நானே, அவர் பாலுள்ள குற்றச் சாட்டினை ஆராய்வேன்" என்று, அவன் ஆணை விடுத்தான்.

கிள்ளி வளவனின் அவையிலே புலவர் வெள்ளைக்குடி நாகனார் கொண்டு வரப்பெற்றனர். அவர் முகத்திலே

சிறிதும் கவலையோ அச்சமோ தோன்றவில்லை. உண்மையின் பேரொளியோடு, அறிவுடைமையின் பேரொளியும் கலந்து விளங்கிக் கொண்டிருந்தன. அவரைக் கண்டதும், புலவர்கள்பாற் பெருமதிப்புக் கொள்பவனுன கிள்ளி வளவனின் உள்ளமும், சிறுபொழுது துணுக்குற்றது.

'பெருந்தகையே! நாட்டின் நன்மைக்காகவே யான் வரி வாங்குபவன். என் ஆட்சியிலே நலிவு ஏதும் இருந்தால் தாங்கள் என்னிடமே வந்து நேரிற் கூறி இருக்கலாமே? அஃதன்றி, மக்கள்பால் அரசனுக்கு எதிரான கருத்துக் களைத் தெரிவித்தல் முறையன்றே?" என்முன்.

'பெருமானே! நீர் செறிந்த கடல்களைத் தன் சுற் றெல்லையாகக் கொண்டிருப்பதுடன், காற்றும் வழங்குத லற்ற வானத்தைத் தனக்கு மேலாகவும் கொண்டு திகழ்வது இந்த உலகம். இதன் கண், தண்ணிய தமிழுக்கு உரிய வராக விளங்கும் காவலர்கள், வெற்றி முரசுகள் முழங்கும் தானைகளை உடையவரான மூவேந்தர்கள் தாம். அம் மூவர்களுள்ளும், 'அரசு' என்று சொல்லிப் போற்றத்தக்க சிறப்பினை உடையதாகத் திகழ்வது நின்னுடைய இச் சோழ அரசேயாகும்.'

தன் அரசைப் போற்றிய புலவரின் சொற்கள், வளவனின் வளவிய தமிழ் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. அவன் முறுவல் கொண்டான். புலவரின் புலமைத்திறம் அவன் உள்ளத்தில் இடம்பெற்றது. அவையோரும், அடுத்துப் புலவர் கூறப் போகின்ற கருத்துக்களைக் கேட்பதிலே ஒருவகையான ஆர்வம் உடையவராகத் திகழ்ந்தனர்.

"கீழ்த் திசையில் மட்டுமே தோன்றுபவனாகிய, விளங்கும் கதிர்களையுடைய கதிரவன், நாற்றிசைகளினும் தோன்றி வந்து வெம்மையுடன் எரித்தனனாயினும், ஒளியுடைய வெள்ளி மீனானது தன்னுடைய திசையி னின்றும் மாறுபட்டதாகி தென்திசைப் பக்கமாகவே சென்ற தாயினும், அதனால் மழை வளமின்றி வாட்டமடையாதது நின் வளநாடு. அழகிய, தண்மையான நீர்வளமுடைய காவிரிப் பேரியாறானது, வந்து, தன் கால்கள் வழியே பாய்ந்து, வயல்களுக்கு வளம் பெருக்கும். அவ்வளத்தால் தோடுகொண்ட வேலின் தோற்றத்தைப் போன்றதாக, அசைந்தாடும் கணுக்களையுடைய கரும்பின் வெண்பூக்கள் வளைந்து தோன்றும். இத்தகைய தன்மையால், 'நாடு' என்று சான்றோர் போற்றுகின்ற சிறப்பினை உடையதும் நின்னுடைய சோழ நாடே ஆகும். அங்ஙனம், அந்நாட் டையும், அதன் பல்வகையான செல்வங்களையும் பெற்றுப், பெருமை கெழுமியவனாக விளங்கும் பெருவேந்தனே! நினக்குக் கூறுவேன்: என் சொற்களைக் கருத்துடன் கேட்பாயாக,

அவையும் அரசனும் புலவரின் புலமைத் நன்கு உணர்ந்து விட்டனர். 'நாட்டுக்கும் அரசுக்கும் அவர் எதிர்ச்செயல் செய்தவர்' என்றிருந்த குற்றச்சாட்டின் நினைவு அவருடைய தொடக்க உரைகளால் மறைந்தன. மன்னன், புலவர் சொல்லப் போவதையே ஆவலுடன் கேட்பதற்குத் தயாராயினன்.

"அறக்கடவுளே இருந்து அறங்கோடாது நீதி வழங்குதல்' போன்று, நீதிகாக்கும் மரபே செங்கோன்மை யாகும். அவ்வாறு நீதி வழங்கும் காலத்து, மன்னன்,

நீதியை வேண்டித் தன்பால் வருவோர்க்குத் தன்னுடைய ஆட்சிப் பெருமிதத்தையும் பிறவற்றையும் காட்டி அவர்களை அஞ்சச் செய்தல் கூடாது. குடிகளுக்கு எளியோனாக, அவர்களின் தொண்டனாகத் தன்னைக் கருதுதலே முறைமை யாகும். இவ்வாறு, காட்சிக்கு எளியராகி நாடுகாவல் நடாத்தும் மன்னரே சிறந்தவர். அவர், மழைத்துளி வேண்டுகின்ற பொழுதிலே, பெருமழை பெற்றோர் போன்று, வளமுடையவராகவும் வாழ்வர்."

அவைக் கண்ணே ஆரவாரம் எழுந்தது. "மழையின்றி நாடு வறண்டதற்குப், புலவர், 'மன்னனின் அறமுறை கோணியது' எனப் பழிக்கின்றனர் போலும்!" என, ஆன்றோர் அஞ்சினர்.

மன்னனோ, தலைகவிழ்ந்து சிந்தனையிலே ஆழ்ந்தான். 'தன்னுடைய ஆட்சியிலே அறம் பிறழ்ந்து விட்டதோ? தான் மக்களைவிட்டு ஒதுங்கி வாழ்கின்றவனோ?' அவனு டைய எண்ணம் எவ்வாறெல்லாமோ சுற்றிச் சுழன்று கொண்டிருந்தது.

புலவர், மன்னனை நேரடியாகவே குற்றம் சுமத்து கின்றார். அவருடைய குரலிலே எழுந்த குமுறல் அவை யினரின் உள்ளங்களிலே எதிரொலித்தன. 'அவரை மன் னன் யாது செய்வானோ?' என்று, அனைவரும் அஞ்சினர். மன்னனோ, 'மேலுந் தொடர்க' எனக் கூறினான். புலவரும் தொடர்ந்தார்.

"கூர்மையான வேற்படையினை உடைய வளவனே! ஞாயிற்றைத் தமக்கு மேலாகச் சுமந்தனவாக மழை மேகங் கள் விளங்கும். அதுபோன்று, கண்ணொளி பறிக்கின்ற

ஒளியுடையதாக விளங்குவதுதான் நீ உயர்த்திருக்கின்ற, வானை முட்டிய பெரிய வெண்கொற்றக் குடையும். அது, வெயிலை மறைத்து, நினக்கு நிழல் செய்வதற்காகக் கொள்ளப் பட்டதோ? எனில், அன்று அன்று.

"வருத்தம் கொண்ட குடிகளின் அல்லலைப் போக்கித், தண்ணளி செய்வதற்கன்றோ அது சின்னமாக அமைந்தது?"

'போதும், புலவர் பெருமானே! என்னைச் சொற்களால் வதைக்கவேண்டாம். என்னுடைய காவலின்கண் எவ்விடத்தே யான் தவறினேன்? அதனைக் கூறிவிடுங்கள். அதனை இப்போதே யான் மாற்றுவதற்கு முயல்வேன்' என்று கதறினான் மன்னன். அவனுடைய ஏவலாளர்கள் பதறினர். அவையிலே, சிறிதும் ஒலியெழாத ஒரு பேரமைதி நிலவிற்று. படைமறவர்களின் கண்கள் சிவந்தன. வாளின் உறையிலே கைகள் சென்றன. எனினும், வயவேந்தனின் வாயசைவுக்குக் காத்து வாளா விருந்தனர்.

புலவர் அதனைக் காணுதவர் அல்லர். அவர் உள்ளம் அதனுல் துணுக்குறவும் இல்லை. தம்முடைய குரல், மக்களின் உரிமைக்குரல் என்பதனை அவர் அறிவார். அறத்தின் பெருந்துணை தம் பக்கமே அமைந்துள்ள நிலையினையும் அவர் அறிவார். எனவே, தம்முடைய குற்றச் சாட்டினையே மேலும் தொடர்ந்தார்.

"வெட்டப்பட்ட பனந்துண்டங்களைப் போலப் பகைவரின் படையானைகளை வெட்டிக் குவித்து, அவர்களின் களிற்றுப் பெருக்கத்தைப் பொருது அழித்தனர் நின்னுடைய படை மறவர்கள். இடமகன்ற பெரிய போர்க்களத்திலே, தம்மீது எதிர்ந்து வருகின்ற பகைமறவர் படை

களை யெல்லாம் எதிர் நின்று தடுத்தும் போரிட்டனர். அவர்கள் நின் படைவீரரின் ஆற்றலுக்கு எதிர் நிற்க ஆற்ருது புறங்காட்டி ஓடக்கண்டு, ஆரவாரமும் செய்தனர். இவ்வாறு, போரிடுகின்ற நின் படையானது நினக்குத் தேடித் தந்த வெற்றியும் எதனுல் அமைந்தது என்பதன் உண்மையை நீ எண்ணிஞய் அல்லை. அதனை எண்ணுததனுலேயே நீ இவ்வாறு நடந்து வருகின்ருய். அந்த வெற்றி அனைத்தும், உழு படையாகிய கொழுமுனை ஊன்றிச் செல்லும் சாலின் மருங்கிலே, விளைந்த விளைவுப் பெருக்கின் பயனுக அமைந்ததேயாம் என்பதனை இனியேனும் நன்கு அறிவாயாக.”

‘புலவர் உரைத்ததன் உண்மை அனைவோர்பாலும் எதிரொலித்து முழக்கமிட்டது. ஆன்ருேர்கள் அதன் உண்மைக்கு உறுதி சொல்பவர் போலத் தோற்றினர். படை மறவர், அது தம்முடைய ஆற்றலைப் பழித்ததாகும் என்று நினைத்தனர். அவர்களின் குமுறலைக் கையமர்த்திய மன்னன் சிந்தனையிலே ஆழ்ந்தான். ‘மேலும் தொடர்க!’ என்று கூறுபவனைப்போலப் புலவரை நோக்கிஞன்.

“மழை, காலத்தே பெய்யாது பொய்க்குமாஞலும்’ அதனுல் வரும் விளைவுப்பெருக்கம் குறைவுற்றுப்போகுமாஞலும், இயல்பற்ற தன்மைகள் மக்களின் செயன்முறைகளிலே தோன்றிஞலும், இந்தப் பரந்த உலகம் அனைத்தும் அதன் காவலனையே பழித்து உரைக்கும். இதனையும் நீ உணர்வாயாக.”

நன்ருக நீயும் அறிந்தனையாஞல், நீயும் பொய்மை உரைக்கும் நின் ஏவலர்களின், ‘எல்லாம் நன்கு நடைபெறுகிறது’ பெருமானே!’ என்ற பொதுமொழி

யினைக் கொள்ளாதிருப்பாயாக. ஏரைப் பாதுகாக்கும் உழவர் குடியினரின் பொறுப்பினைத் தாங்கிக் காத்தற்கு முயல்வாயாக. அங்ஙனம், நீ குடிமக்களைப் பேணிக்காக் கின்ற பெருஞ் செயலிலே நிலைபெற்றனையாயின் நின் வலி மையும் பெருகும்; நினக்கு அடங்காத பகைவரைப் படை கொண்டு சென்று நீ அடக்குதலும் வேண்டா; அவரே வந்து நின் தாள்களைப் பணிந்து நிற்பவராவர்."

புலவர் தம் அறப்போரினைச் செவ்வையாகவே நிகழ்த் தினர். அவருடைய குரல் ஒற்றைத் தனிமனிதருடையது தான். என்றாலும், அதன்கண் நிரம்பியிருந்த உண்மை யின் ஆற்றல், அவர்க்கு அவர்கள் அனைவரையுமே வென்றி ஒரு பெருநிலையைத் தந்தது.

கலங்கிய மன்னன் எழுந்து புலவரருகே வந்தான். 'பெருமானே' என்னைப் பொறுத்துக் கொள்ளுங்கள். போர் வெற்றியின் புகழ் மயக்கம் என் கண்களை மறைத்து விட்டிருந்தது. அந்தத் திரை இப்போது அகன்றது. இனி, நான் மக்களின் நலத்திற்கே முதலிடம் தருவேன். தங்களின் அறவுரையே, இனி, என் ஆட்சியின் அரசியற் சட்ட மாகும்" என்றான்.

மன்னனின் செயலைப் புலவரும் கண்டு மனம் உருகினர். 'பெருமானே!' நின் நல்லுள்ளத்தின் தன்மை அறியாது சொல்லம்புகளால் நின்னைத் தாக்கினேனே?' என்றும் வருந்தினர். அந்தக் காட்சியை உறையூர் அவையினர் கண்ணிமையாதாராகக் கண்டு களித்தனர்.

வளவனின் புதிய ஆணை எங்கும் பிறந்தது. படை மறவர்களும், அரசியல் பணியாளர்களும், 'உழவர்களே

நாட்டின் உயிர்நிலை' என்ற உயர்ந்த குறிக்கோளினை முன்னிறுத்தி, அவர்களின் தொண்டர்களாகத் தம்மைக் கருதி, அவர்களுக்கு உதவத் தொடங்கினர்.

இந்த வரலாற்றுச் செய்தியை உணர்த்துவது, புறநானூற்றின் முப்பத்தைந்தாவது பாடல். சங்கத் தமிழகத்தே, உழவரின் உரிமைக் கொடியினை உயர்த்துப் போரிட்டு, அதன்கண் வெற்றியும் பெற்றுத் திகழ்ந்தவர் வெள்ளைக்குடி நாகனர். அவருடைய அறப்போர், உலகத்து அறப்போர்களின் வரலாற்றிலேயே பழைமையும் சிறப்பும் உடையதாகும். அவர், நம் நாட்டகத்து மன்னர்களின் உள்ளத்திலே, புதியதோர் திருப்பத்தினை ஏற்படுத்திய ஒப்புயர்வற்ற பெரியார் ஆவர்.

# 3. அதிக வரிக்கு எதிர்ப்பு

முன்னைய பகுதியிலே, நாட்டிலே பஞ்சம் நிலவிய காலத்திலே, மக்களை வருத்தி வரிவாங்கிய மன்னன் ஒருவனுக்கு எதிராக, எதிர்ப்புக் குரலினை எழுப்பிய பெரியார் ஒருவரின் வரலாற்றினை நாம் கண்டோம். இந்தப் பகுதியுள், அரசு அதிகமாக வரி வாங்கத் தொடங்க, அதனால் மக்கள் துன்புற, அதனைக் கண்டு உள்ளம் கொதித்தெழுந்து, அறப்போர் தொடுத்த மற்றொரு சான்றோரைப் பற்றி நாம் காண்போம்.

தமிழகத்து மூவேந்தர் நாடுகளுள், பாண்டிப் பெருநாடு பழம்பெருமை உடையது ஆகும். பாண்டியரை, அதனாற், 'பழையர்' என்றே சான்றோர்கள் போற்றவும் செய்வர். வழிவழியாக, அறமுறை பிறழாது செங்கோன்மை நடாத்திய சிறந்த புகழ் உடையவராகவும் பாண்டியர்கள் திகழ்ந்தனர். இவற்றினும் மேலாகத், தாய்மொழியாம் தமிழினைப் பேணிப்புரந்த பெருந்தகைமை பாண்டியர்க்கேயுரிய தனியுரிமையாகவும் விளங்கிற்று.

தமிழ்ச் செய்யுட்களைக் கேட்டுப் பரிசில் தந்தோர் பலராயினும், தமிழினை ஆராய ஒரு சங்கம் அமைத்து,அதன் கண் அறநெறிச் சான்றோரைக் கூடியிருக்கச் செய்து, தமிழாய்வு கண்டு சிறந்த புகழாளர்கள் பாண்டியரே யாவர். அத்தகைய பாண்டியர்களுள் ஒருவன் அறிவுடை நம்பி என்பவன்.

இவன் இயற்பெயர் யாதெனத் தெரிந்திலது.அறிவுடை மையாற் சிறப்புற்றிருந்தோன் இவன்; ஆதலினால், இவனை அறிவுடை நம்பி என்றே ஆன்றோர்கள் அழைத்து வரலாயினர். நாளடைவில், அதுவே இவனுடைய பெயராக வும் நிலைபெற்றது.

அறிவுடைநம்பி அறிவாற்றலிற் சிறந்தமை போன்றே, பாண்டியர்களுக்கே உரித்தான பிற குணநலன்களினும் சிறப்புற்றோனாக விளங்கினான். அவன் உள்ளத்திலே அறிவின் செழுமையும், அன்பின் தண்மையும், பண்பின் சீர்மையும், ஒன்றுகூடி உயர்வுபெற்று விளங்கின.

அறிவுடைநம்பி, தனக்கேற்ற ஒரு பெண்ணினை மணந்துகொண்டு, இல்லறு வாழ்வினையும் தொடங்கினான். கற்புச் செல்வியும் பொற்பின் பெருமாட்டியுமாக அந்த அம்மையும் விளங்கினாள்.இன்பத்தின் எல்லையிலே அவர்கள் இனிதாகவே இல்லற வாழ்வினை நடாத்தி வந்தனர்.

தம்முடைய மன்னனும் கோப்பெருந்தேவியும் நடத்தி வந்த இல்வாழ்வின் பெருமையைப், பாண்டி நாட்டு மக்கள் அனைவருமே பெரிதும் பாராட்டி வந்தனர். அந்த நிலை யிலே, அவர்களுடைய சிறப்பு விளங்கினாலுங்கூட, அவர் கள் வாழ்வின் ஒரு பகுதியிலே, சிறிது குறையும் இருக்கத்

தான் செய்தது. ஆண்டுகள் பல கழிந்த பின்னருங்கூட, அவர்களை மகிழ்விக்க ஒரு குழந்தைச்செல்வம் அவர்கட்குத் தோன்றவில்லை. முதலிலே, அந்தக் குறை பெரிதாகப் படவில்லை. எனினும், ஆண்டுகள் செல்லச்செல்ல, அந்தக் கவலை மன்னனின் தேவிக்குப் பெரிதாகிக் கொண்டே போயிற்று.

தன் தேவியின் தீராத மனக்கவலையினை அறிந்த அறிவுடை நம்பியின் உள்ளமும் அதிற் பங்குகொள்ளல் ஆயிற்று. அந்த ஏக்கப் பெருஞ்சுமை அவனையும் வாட்டி வருத்தத் தொடங்கிற்று.

'நாட்டின் மன்னன்' என்ற பெருந்தகுதியும், 'வெற்றி வேந்தன்' என்ற பெரும்புகழும், 'அரசரிலே சிறந்தோன்' என்ற ஆன்றோரின் போற்றுதலும், எல்லாம் அவனுக்கு இருந்தன. ஆனால், மக்கட் செல்வம் இல்லையே?' என்ற மனக்கவலை மிகுதியாக, அவனுடைய ஊக்கமும் படிப்படியாகக் குறைந்து போகத் தொடங்கிற்று.

நாட்டு அரசியலிலும், பிறவற்றிலும், முன்னைப் போன்று ஈடுபாடு கொள்ளவும், அவற்றிலே முறையாகக் கருத்தைச் செலுத்திவரவும் அவனால் இயலவில்லை. அவன், வாழ்வையே ஒருவகை வெறுப்பான கண்ணோட்டத்துடனே நோக்கத் தொடங்கிவிட்டான்.

மன்னனின் மன வேதனையினையும், அதனால், நாட்டின் அரசியலைப் பொறுப்பாகப் பேணுபவனன்றி அவன் போய்க் கொண்டிருக்கின்ற தன்மையினையுங், கண்டனர் சான்றோர்கள். அவர்கள் உள்ளம் பெரிதும் வேதனைப்படத் தொடங்கிற்று.

எனினும், 'மன்னன்' என்ற வகையிலே அவன் நாட்டு மக்கள் அனைவரின் நல் வாழ்வுக்குமே பொறுப்பு உடையவனயிற்றே; தன்னுடைய சொந்த விருப்பு வெறுப்புக்களை ஒதுக்கி, நாட்டின் நலனிலே கருத்துச் செலுத்த வேண்டியவனயிற்றே; அவனே இவ்வாறு தன்னளவில் வெறுப்புற்ற தன்மையினனாக இருப்பின் அது நாட்டின் வாழ்வியலையும் பெரிதும் சீர்கேட்டிற்கு உள்ளாக்குமே என்று, அவர்கள் மிகவும் கவலையுற்றனர். எங்ஙனமேனும் தம் மன்னனைக் கண்டு, அவன் உள்ளத்தினை அரசியற் பொறுப்புகளிலே மீண்டும் ஈடுபடுமாறு திருப்பிவிடவேண்டும் என்றும் கருதினர். அதன்மேல், அவனைச் சென்று காண்பதற்கும் முடிவு செய்து, ஒரு நாள், அவனைக் காணவும் சென்றனர்.

சான்றோர்கள் சிலர் தன்னைக் காண்பதற்கு வருகின்ற செய்தியை வாயிற்காவலன் அறிவிக்கவும், மன்னன் அவர்களை வரவேற்கவும், அவர்கள் வருகின்றதுபற்றி அறிந்து கொள்ளவும் ஆவல் உடையவனானன். 'அவர்களை வர விடுக!' எனத், தன் வாயிற்காவலனிடம் ஏவிவிட்டு, அவர்களை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தான்.

அவனுக்கு, அவனுடைய பொறுப்பினை எடுத்துக் காட்டி அறிவுறுத்த வேண்டுமென்ற நினைவுடன் வந்த சான்றோர்கள், அவனிருந்த நிலையினைக் கண்டதும் பதறினர். வெற்றி மிடுக்குடன் வீரவுலா வந்தபோதும், இளமைச் செறிவுடன் இல்வாழ்விலே ஈடுபட்டபோதும், மற்றும் பற்பல காலங்களினும், அவன்பால் மிளிர்ந்த ஊக்கமும் பொலிவும் உயர்வும் அறவே போய்விட்டன. கவலையும் தளர்வும் கொண்டவனாகக், கைகூப்பித் தங்களை வரவேற்ற அவனுடைய தன்மை, அவர்களைப் பெரிதும் கவலையுறச்

செய்துவிட்டது. "தாம் நினைத்து வந்ததனைச் சொல்வது, மீண்டும் அவனைப் புண்படுத்துவதாக அமைந்துவிடக் கூடாதே?" என நினைத்து அவர்கள் வருந்தினர். எனினும், கடமையின் நினைவு அவர்களைச் சற்றே துணிவுகொள்ளச் செய்தது.

'வாருங்கள். வந்து அமருங்கள். உங்கள் வரவினாலே என் உள்ளம் புதிய கிளர்ச்சி பெறுகின்றது' எனக் கூறி அவர்களை வரவேற்றான் மன்னன்.

'வாழ்க பெருமானே! வளர்க நின் புகழ்! வாழ்க நின் கொற்றம்!' என வாழ்த்தியவாறே, அவர்களும் அவன்முன் அமர்ந்தனர்.

'தாங்கள், என்றுமில்லாது என்னைக் காண வருவதற் குரிய காரணம் யாதோ? அதனை யான் அறிந்துகொள்ள லாமோ?' என்றான், அறிவுடை நம்பி.

'பெருமானே! நின்னைக் காண வேண்டும் என்ற எண்ணம் பிறந்தது. ஏதோ கவலை கொண்டிருப்பதாகவும் கேட்டோம். ஆகவே, நின்னைக் கண்டு செல்ல விரும்பி வந்துள்ளோம். நின் உடல்நலம் செம்மைதானே? தேவியார் நலந்தானே?' என்றனர், அவர்கள்.

'அனைவரும் நலமே! தங்களைக் கண்டதும் என் கவலை கள் அனைத்துமே அகன்றன. வாழ்விலே கவலையற்றவர்கள் தாம் யாவர்? ஒவ்வொருவருக்கும் ஏதோவொரு கவலை இருக் கத்தானே செய்யும்? அந்த நியதிக்கு யானும் விதிவிலக்கு அன்றே?' என்று கூறித், தன் கவலையை மறந்தவன்போற் சிரிக்க முயன்றான் மன்னன். எனினும், அவன் அதனை

நிறைவேற்றவியலாது, அதனிடத்தே தோல்வியே பெற்றான். அவன் முகத்திலே படர்ந்திருந்த துயரச்சுமை அவனைச் சான்றோர்க்குக் காட்டிக் கொடுத்துவிட்டது.

'பெருமானே! வாழ்வு கவலைகளைக் கொண்டதுதான்; எனினும், மன்னனின் கவலை நாட்டின் நலத்தையே சீர் குலைத்து விடுவது. ஆதலின், அதனை விலக்குவதற்கு முயல வேண்டுவது தங்கள் கடமையன்றோ?' என்றனர், அவர்கள்.

'உண்மைதான். ஆயின், என் கவலை எளிதிலே தீர்வது அல்லவே? அதனை என்னையன்றிப் பிறரோடு பகிர்ந்து கொள்வதும் என்னால் இயலாதே?' என்றான், அறிவுடை நம்பி.

'பெரும! தாங்கள் எண்ணுவது முறையன்று. கவலைக்கு அடிப்படைக் காரணங்கள் பல இருக்கலாம். அதனைப் போக்குவதற்கு வழிவகைகள் காண்பதுவே அதனை நீக்கிக் கொள்வதற்குரிய சிறந்த செயலாம் அன்றோ?' என்றனர் சான்றோர்.

'உண்மைதான். நீக்குவதற்கு நம்மாலும் இயலாத ஒன்றாக அந்தக் கவலை அமைந்துவிட்டால், அப்புறம் என்ன செய்வது?' மன்னன், சான்றோரை நோக்கி அமைதி யுடனேயே வினவினான்.

'அப்பொழுது, அதனை அறவே மறந்துவிட முயல்வதே அறிவுடைமையாகும். அதற்கு, அதனை மறக்கச் செய் வனவான பிற நிகழ்ச்சிகளிலே ஈடுபடுவது சிறந்த நெறி யாகும்' என்றனர், அவர்கள்.

அறிவுடை நம்பி, அவர்களின் விடையைக் கேட்டதும், மனம் திறந்து, தன் கவலையை வெளியிடத் தொடங்கினன்.

"சான்றோர்களே! பல்வகையான சுவை மிகுந்த உணவுப் பொருள்களைப் படைத்துப், பலரோடும் கூடி உண்கின்ற, 'உடைமை' என்று சொல்லப்படும் ஒரு நிலையான பெருஞ்செல்வத்தைப் பெற்றவர்களாயினும், அதனல் மட்டுமே அவர்கட்கு இன்பம் உளதாமோ?"

"அந்த விருந்து இடையிடையே தடைப்படுமாறு, குறுகுறு நடந்தும், சிறு கை நீட்டியும், கைகளை உண்கலத்திலே இட்டும், அதனல் நம் உடலைத் தொட்டும், கவ்வியும், துழந்தும், நெய்யுடைய அடிசிலை எல்லாம் மேனி முழுதுமே சிதறியும், மயக்கமுறச் செய்யும் மக்கட்செல்வம் இருப்பதன்றே செல்வத்துட் சிறந்த செல்வமாகும். அது இல்லாதவர்களுக்கு, எத்துணைச் செல்வம் இருப்பினும், தம் வாழ்விலே யாதும் பயன் உண்டோ? அவர்கள் வாழ்வின் குறைபாடுகளும் தீருமோ?" என்ருன்.

சான்ருேர்கள் அவனுடைய கேள்விக்கு நேரடியாக விடை சொல்ல இயலாதவர்களாக, வாயடைத்துப் போயிருந்தனர். எனினும், "பெருமானே! நின் சொற்களிலே உண்மையின் ஒளியினைக் காண்கின்ருேம். அதனை உணரவும் செய்கின்ருேம். நினக்கு நன்மக்கட்பேறு தவருது வாய்க்கும். நின்போன்ற அருளாளனுக்கு அந்தக் குறை ஒரு போதுமே நிலைத்திராது" என்றனர்.

"இத்துணை ஆண்டுகள் எனக்கு மகப்பேறு வாய்க்கவில்லையே? இனியோ அது வாய்க்கப் போகின்றது?"

என்று, சோர்வுடன் கூறினன் அறிவுடை நம்பி. அவன் குரலின் துயரச்சாயை அந்த ஆன்றோர்களின்பாலும் சென்று படிந்தது.

'மன்னு! ஆண்டிற் பன்முறை பூக்கும் செடிகளும் உள; பன்னிரண்டாண்டிற்கு ஒருமுறை பூக்கும் குறிஞ்சியும் யாம் அறிவோம்; ஆகவே, அதுபற்றிக் கவலையுறுதல் வேண்டா. நம் தேவியார் திருவயிற்றிலே திருக்குமரன் விரைவிலே தோன்றுவான்; கவலையை மறந்து ஊக்கமாக இருப்பாயாக' என்றனர்.

'தங்கள் நல்வாக்கு உறுதிபெறும் நன்னுளை ஆவலுடன் எதிர்நோக்கி இருக்கின்றேன். தங்கள் சொற்களால் ஓரளவு நிம்மதியும் பெற்றேன்' என்றுன் மன்னன். அவன் குரலிலே தோன்றிய புதுமையான நம்பிக்கையைக் கண்ட சான்ருேர்களும், 'தம்முடைய சொற்கள் தக்கவாறு பயனளித்தன' என்ற மனநிறைவுடன், அவனை வாழ்த்தி, விடைபெற்றுச் சென்றனர்.

அரண்மனையிலே, ஆன்ருேர் இத்தகைய நன் முயற்சியிலே ஈடுபட்டிருந்த காலத்திலே, அவனுடைய ஆட்சிப் பணியாளர்களுட் சிலர், மன்னனின் நிலையைத் தமக்கு ஆதரவாகப் பயன்படுத்தத் துணிந்தனர். அவர்களுடைய எண்ணம், தங்கள் அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்வதிலேயே சென்றது. அவர்கள், அதற்குக் கையாண்ட முதற் செயல், மக்களின் வரியை மிகுதியாக்கியதே யாகும்.

'நாட்டிலே வரிகள் மிகுதியாக வாங்கப்படவேண்டும்' என்று, அவர்கள் அங்கங்கேயுள்ள தண்டல்காரர்களைப் பணித்தனர். பழைய வரியினும் மிகவும் கூடுதலான வரி வீதத்தையும் விதித்தனர்.

நாடு வளமையுடன்தான் விளங்கிற்று; விளைச்சலிற் குறைவுகள் இல்லையென்பதும் உண்மைதான்; ஆயினும், அளவுக்கு மீறிய அரசிறை செலுத்துமாறு தண்டல் காரர்கள் வற்புறுத்தவே, மக்கள் மனங்கொதித்தனர்.

'அறநெறி வழுவாத நம் மன்னனின் ஆட்சியிலுமோ இத்தகைய கொடுமை?' எனப் பதறினர். 'அளவுக்கு மிகுதியாக வரி செலுத்துவதற்கு இசையோம்' என்று, மறுத்தனர் சிலர். அவர்களைக் கொடுமைக்கு உட்படுத்தவும், வரியினைக் கண்டிப்பாக வாங்கவும், தண்டல்காரர்கள் சற்றேனும் தயங்கவில்லை.

இந்த நிலையிலே, **பிசிர்** என்ற ஊரின்கண் வாழ்ந்து வந்த சான்றோரான **ஆந்தையார்** என்பவரின் உள்ளம் அரசின் போக்கினைக் கண்டு வருந்திற்று; மக்கள் படும் வேதனை மிகுதிகண்டு இரக்கம் கொண்டது. 'மன்னனைக் கண்டு ஒரு வழிசெய்தல் வேண்டும்' எனப், புறப்பட்டார் அவர்.

பிசிர் ஆந்தையார் சிறந்த புலமை உள்ளம் உடையவர். அதுகாலைச் சோணாட்டை ஆண்டுவந்த **கோப்பெருஞ் சோழன்** புலவர்களைப் பேணும் பெருமானாக விளங்கியது கேட்டு, அவன்பால் பேரன்பு கொண்டிருந்தவர். அவனும் பிசிராந்தையாரின் அன்பின் பெருக்கை அறிந்து, அவர் பால் பெருநட்பு உடையவனாகவே விளங்கினான்.

இருவரும் ஒரு முறையேனும் நேரிற் கண்டு பழகியதும் இல்லை. எனினும், ஒருவர் மற்றையவர்பால் கொண்டிருந்த அன்பின் பெருக்கம், நாளுக்குநாள் தழைத்து வளரலாயிற்று. அவர்களுடைய கலந்த கேண்மையின் தன்மை, உலகு கண்டறியாத ஒரு உயரிய நட்பாகவும் நிலைபெறுவதாயிற்று. முடிவிலே, கோப்பெருஞ் சோழன்

வடக்கிருந்து உயிர்விட முடிவு செய்தபோது, 'என்னருகே பிசிராந்தையாருக்கும் இடம் அமைக்க' என்று சொல்லுமளவிற்கு அவர்களுடைய அன்பின் கலப்பு விளங்கிற்று.

'வளமான காலத்தே பிசிராந்தை என்னைக் காண வரவில்லை என்பது உண்மை எனினும், இப்போது யான் வருத்தமுற்று உயிர்விடத் துணிந்துள்ள இந்த வேளையிலே தவறாது வருவான்' என்று, உறுதியோடு சொன்னான் கோப்பெருஞ் சோழன். அவனுடைய அந்த நட்பின் உறுதியையும், அது பழுதுபடாமல், அங்ஙனமே சென்று தாமும் வடக்கிருந்து அவனோடு உயிர்நீத்த பிசிராந்தையாரின் பெருமையையும், பொத்தியார் என்னும் புலவர் பெருமான் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

அத்தகைய பேரன்பு கொண்ட, கெழுமிய நட்பின் இலக்கணமாக விளங்கிய, சான்றோரான பிசிராந்தையாரின் உள்ளமே, அறிவுடை நம்பியின் ஆட்சியிலே, அளவுக்கு மிகுதியான வரிவேண்டிய செயலைக்கண்டு, அந்நாள் வெதும்பிற்று. அவனைக் காண்பதற்கும் அவர் புறப்பட்டு விட்டார். மதுரைவந்து, அரசனின் திருக்கோயிலையும் சென்று அடைந்தார்.

"பிசிராந்தை என்பான் தங்களைக் காண்பதற்கு வந்துள்ளனன்; அவன் கோப்பெருஞ் சோழனின் நண்பன்; புலமையாளன்' என்று, நின் மன்னன்பாற் கூறுக," என, வாயிற் காவலனை ஏவினர் புலவர்.

அவனும் மன்னனிடம் சென்று, பணிந்துநின்று, செய்தியை அறிவித்தான். அறிவுடை நம்பியின் உள்ளத்தே ஆர்வம் களிகொண்டது. பிசிராந்தையாரின் பெரும் புலமையையும், அவர்க்கும் சோழனுக்கும் இடையே நிலவிவந்த

அன்புப் பிணிப்பையும், சான்றோர்கள் உரைக்கக் கேட்டு அறிந்தவன் அவன். அவர், 'தன் கடைவாயிலிலே உள்ளனர்' என்றதும், அவன் கொண்ட மகிழ்விற்கு ஓர் எல்லையே இல்லையாயிற்று.

'அவரை நேரேயே அழைத்து வருவதற்கு என்ன? ஏன், அவரைக் கடைவாயிலிலேயே நிற்க வைத்தனை?' எனத், தன் வாயிற்காவலனைச் சினந்துகொண்டு, அவரை வர வேற்கத், தானே கடைவாயிலை நோக்கி வந்துவிட்டனன்.

அரசனின் அநுமதியை எதிர்பார்த்துக் காத்திருந்த பிசிராந்தையாரின் முன்னர், அவனே வந்து தோன்றி, 'வருக, பெருமானே! வருக! வருக! தங்களின் வரவால் நான் பேறுபெற்றேன்' என்று வரவேற்றதும், அவர் சிறிது வியப்பும் திகைப்பும் கொண்டவராக, மெய்ம்மறந்து நின்றனர். பின்னர், 'வாழ்க மன்னு! வாழ்க நின் கொற்றம்!' எனவும் வாழ்த்தினர்.

அவரை, அன்புடன் தன் திருக்கோயிலின் உள்ளே அழைத்துச் சென்று, ஆர்வமுடன் உபசரித்துக் கொண் டிருந்தான் மன்னன். அவன்பால்,குறையினை எடுத்துக்கூறிக் கண்டிக்கும் நோக்கத்துடன் வந்த பிசிராந்தையாரின் பாடு சிக்கலாயிற்று. 'இத் தகையான் ஒருபோதும் அத்தகைய செயலுக்குக் காரணனாக இருக்கவே மாட்டான்' என, அவர் உள்ளம் கூறியது. எனவே, அதனைச் சொல்லாது, அவனை வாழ்த்திக் கொண்டே அவர் அமர்ந்திருந்தனர்.

'பெருமானே! தாங்களோ அறிவிற்சிறந்த சான்றோர். தங்கள் கருணையால், யான், இன்று நற்பேறு வாய்க்கப் பெற்றவனானேன். தங்கள் திருவாக்கினால் என்னை வாழ்த் தவும் கேட்டு இன்புற்றேன். எனினும், தங்கள் வருகையின் காரணம் ஏதோ மற்றொன்று உளதுபோல், தங்கள் முகக்

குறிப்பினாலே அறிகின்றேன். அஃது என்னையோ?" என்று கேட்டான் அறிவுடை நம்பி.

'அரசே! நின் பெயர் அறிவுடை நம்பி என்றல் மிகவும் பொருத்தம் உடையதேயாகும் என்பதை இன்றே கண்டோம். யாம் கருதி வந்த செய்தி ஒன்று உளது என்பது உண்மைதான். அதனைச் சொல்வது நின்னைப் பெரிதும் புண்படுத்தும்' என்றார், புலவர்.

''அறிவுடை நம்பி அதனைக் கேட்டுத் திகைப்புற்றான். என் உள்ளம் புண்படுமோ? அத்தகைய கொடுஞ் செய்தி தான் யாது, பெருமானே?'' என்றான் அவன்.

'அது நின் அரசின் நெறி பற்றியது' என்றனர், புலவர்.

''என் அரசின் நெறிபற்றியதோ? யான் அரசநெறியிற் பிழைத்தேனோ? என்ன பிழை நிகழ்ந்தது? எவர் காரணர்?'' அவன் படபடப்புடன் பேசினான்.

''மன்னா! நினக்கு ஒன்று கூறுவேன். வயல்களிலே விளைகின்ற நெற்பயிரினை அறுத்துக் கவளமாக யானைக்கு ஊட்டி வந்தால், ஒரு மா நிறைவுகூட இல்லாத நிலத்துப் பயிரும், அதற்குப் பலநாட்களுக்கு உணவாக அமையும். நூறு செறு அளவுப் பெருநிலமாயினும், அந்த யானை தனியே அதன்கண் புகுந்து உண்ணத் தொடங்கினால், அதன் வாய்ப்புகுவதனினும், அதன் காலுட்பட்டு அழிவது தான் பெரிதாயிருக்கும், இதனை நீ அறிவாய் அன்றோ?

''அறிவுள்ள வேந்தன் வரி கொள்ளும் நிலையினை அறிந்து, மக்களிடமிருந்து கொள்பவனானால், கோடி கோடியாகச் செல்வம் குவிவதுடன், நாடும் பெரிதும் வளமுடையதாகத் திகழும். இதனையும் அறிவாய் அல்லவோ?''

"ஏன் இதனை எல்லாம்கூறுகின்றீர்கள்? யான் மக்களைக் கொடுமை செய்தேனோ? அவர்களை வாட்டி வதைத்து வரி வாங்கினேனோ?" அரசன் பதறினான்.

"அரசன் வலியற்றவன் ஆகி, நாளும் வரிசையின் தகுதி யறியாத வெற்றாரவாரம் கொண்ட, தன் அரசச் சுற்றத்துடன் மக்களை வருத்திக், கொடுமையாக அளவுக்கு மீறி வரி வாங்குதலை விரும்பினனாயின், "யானை புகுந்த புலம்போல' அந்த நாடும் கெட்டு அழியும்; அவனும் அதன் பயனை அனுபவிப்பான்" என்றனர் புலவர்.

அறிவுடை நம்பிக்கு உண்மை ஒருவாறு தெரிந்துவிட்டது. தன்னுடைய ஏவற் சுற்றத்தினர் நாட்டுமக்களைக் கொடுமைப் படுத்தி மிக்க வரியினைத் தண்டல் செய்கின்றனர் என்பதனை அவன் அறிந்துகொண்டான். அதனைத் தான் அறியாதுபோயினை, தன் தளர்வும் அவனை வாட்டியது. அவனுடைய குரல் அப்போது கடுமையாயிற்று.

"உடனே நம் அரசச்சுற்றத்துத் தலைவர்களை வரச் செய்க" என்று பணியாளை ஏவினான். கடுமையான எச்சரிக்கையுடன்,மக்களைக் கொடுமைப்படுத்தி மிகுவரி வாங்கியோரைத் தண்டிக்கும்படியும், மிகுதியானதெல்லாம் கொடுத்தவர்களிடம் திருப்புவதுடன் தன் சார்பிலே மன்னிப்புக் கேட்குமாறும் பணித்தான். புலவருக்கும் தனக்கு அறிவுறுத்தியதற்காக நன்றி செலுத்தினான். மீண்டும், அரசியலில் கவனம் செல்லத்தொடங்கிற்று, அவன்பால்.

பிசிராந்தையார் சிலகாலம் அவனுடன் இருந்துவிட்டு, அவனளித்த பரிசிலோடும், தாம் சென்ற முயற்சியின்

வெற்றிப் பெருமிதத்தோடும் ஊர் திரும்பினுர். அவருடைய அறப்போர் வெற்றிபெற்றது. தம்முடைய துயர் தீர்த்த அவரை, நாட்டு மக்கள் அனைவருமே போற்றினர். அவரும் மன அமைதி பெற்றவராக, மன்னனைப் பொற்றியவராக மகிழ்வுடன் விளங்கினுர்.

# 4. உயிர்காத்த உத்தமர்

முற்காலத்தே, இன்றைய தென்னாற்காடு மாவட்டத்து பெண்ணையாற்றங் கரையிலிருக்கும் திருக்கோவலூர், ஓர் அரசின் கோநகராகச், சீருடனும் சிறப்புடனும் திகழ்ந்து வந்தது. மலையமான்கள் என்னும் அரசவழியினர் அந்தப் பகுதியை ஆண்டு வந்தனர். அவர்கள் நாடும் 'மலையமான் நாடு' என, வழங்கிவந்தது.

மலையமான்களுள் பெரும்புகழ் பெற்றோனாகத் திகழ்ந்தவன், மலையமான் திருமுடிக் காரி என்பவனாவான். இவன் வள்ளன்மையிலே மிக்கோனாகவும் திகழ்ந்தனன். கடை ஏழு வள்ளல்களுள் இவனையும் ஒருவனாகக்கொண்டு போற்றுவர் சான்றோர்.

இவனிடம் 'காரி' என்றோர் போர்க்குதிரை இருந்தது. போர்க்களத்தே, அதன்மீது அமர்ந்து, பகைவர் நடுங்கப் போர்புரியும் வல்லமை உடையவன் இவன். 'அதோ காரி!' என்ற சொற்கள், பகைப்படையினரை நடுநடுங்கச்செய்து வந்தன. 'காரி' என்பதே அவனுடைய சிறப்புப் பெயராகவும் அமைந்தது.

மலையமானிடம் ஆற்றல் மிகுந்த பெரும்படை யொன் றும் இருந்தது. படைப் பயிற்சியிலே சிறப்புற்றிருந்த

அதனைக் கண்டதுமே, பகைவர்கள் புறங்காட்டி ஓடத் தொடங்கும் அளவிற்கு, அதனுடைய சிறப்பு நாடு முழுவதும் பரவியிருந்தது.

இவனுடைய படையாண்மையைக் கண்ட சேரரும் சோழரும், இவனுடைய துணையைத் தமக்கு வேண்டினர். மலையமான், சேரருக்கு உதவிசெய்ய இசைந்தான். அவர்கட்கு உதவியாகக், கொல்லியை ஆண்ட வல்வில் ஓரியைக் கொன்று, அவன் நாட்டையும் சேரருக்கு உடைமை யாக்கினன். சேரர்களுக்குப் பகையாயிருந்த தகடூர் வேந்தனோடு, தானும் பகைகொண்டு, அவனை ஒழிக்கக் காலமும் பார்த்திருந்தான்.

மலையனின் போர்ச்செயல் வலுப்பெற்று வருவதையும், அவன் சேரர் பக்கமாக நிற்பதனால் தம்முடைய செல்வாக்கு குறைந்து வருவதையும் கண்ட சோழ மன்னர்கள், பெரிதும் கவலைகொள்பவர் ஆயினர். அப்போது, சோழநாட்டின் நிலையும் உறையூர்ச்சோழனுக்கும் புகார்ச் சோழனுக்குமாக இரண்டுபட்டுக் கிடந்ததனால், காரியை வெல்வது சோழர் களுக்கும் எளிதாயில்லை. தங்களுக்குள் இருந்த பகைமைக்கு வழிகாண்பதிலேயே அவர்களின் கருத்துச் சென்றது.

இந்நிலையிலே, ஓரியின் முடிவுகண்ட தகடூர் அதியமான் பெரிதும் கவலையுற்றான். தனக்கும் சேரர்க்கும் இடையே இருந்த பகைமை அவன் நினைவிலே நிழலாடியது. சேரர் தன்மேற் பகைகொண்டு படையுடன் வரும்போது, மலையமானும் அவர்கட்குத் துணையாகி வருவது அறிந்து, அவன் கொதிப்படைந்தான். எப்படியும் கோவலூரை முதலில் அழித்துவிட வேண்டும் என்றும் முடிவுசெய்தான்.

அவனுடைய கோவலூர்ப் படையெடுப்பும் தொடங் கிற்று. அதியனின் படைகள் மிகவும் கடுமையாகப்

போரிட்டன. காரியின் படையணிகள் சிதறின. காரியின் வலுக் குறைந்துபோயிற்று. அவன் எதிர்பார்த்த படைத் துணைகள் வராது போயின. காரி கலங்கினான். கோவலூர் வீழ்ந்துவிட்டது. அதியன் வெற்றி முழக்குடன் தகடூர் திரும்பினான்.

மலையமானை அறவே ஒழித்துவிட எதிர்பார்த்திருந்தவர்களுள் கிள்ளிவளவனும் ஒருவன். அவன் அப்போது புகாரிலே இருந்து அரசாண்டிருந்தவன். அதியனின் கோவலூர் முற்றுகையினைக் கேட்டதும், அவனும் கோவலூரை நோக்கிப் படைகொண்டு சென்றான். சோழர் படைகளும் மலையமானின் நாட்டுள் புகுந்தன. அதியனும் சோழரும் ஒன்றுபட்டுத் தாக்கவே காரி கடும்போர் இயற்றியும், வலுவிழந்து களத்திலே வீழ்ந்துபட்டான். அவனுடைய மக்கள் இருவர் அப்போது சோழப் படையினரின் கைப்பட்டனர்.

வெற்றி முழக்கத்துடன் சோழர் படையும் புகார் திரும்பிற்று. வளவனின் சீற்றம் மலையமானின் வீழ்ச்சியாலும் தணியவில்லை. 'அவன் வழியே இல்லாது அறவே ஒழித்துவிட வேண்டும்' என்று எண்ணினான். அவனுடைய சிறுவர்கள் இருவரையும் கொன்றுவிட முடிவு செய்தான். 'யானைக் கால்களால் அவர்களைத் தலையிடறச் செய்து கொல்வது' என்ற கொடுஞ் செயலுக்கும் துணிந்தான். அதற்குரிய. ஆணையும் அவனிடமிருந்து பிறந்துவிட்டது.

அந்தக் கொடிய அரசாணையைக் கேட்டு நாடெல்லாம் நடுங்கின. 'களத்திலே கொல்வதன்றி, மற்றுக், கள்ளமறியாச் சிறுவரைக் கொல்விக்கப் போகின்ற அந்த நீதியற்ற போக்கினைத் தடுக்க வகையில்லையே?' எனப்

பொருமினர் சான்றோர். 'தமிழரின் போர்மரபிற்கே அது இழுக்கு' என்று கருதினர், அனைவரும்.

எனினும், கிள்ளிவளவனிருந்த கடுமையை அறிந்த அவர்கள், ஏதும் செய்வதற்கு வகையறியாது, வாயவிந்து கிடந்தனர். குழந்தைகளைக் கொல்வதற்குக் குறிப்பிட்ட நாளும் நெருங்கிக்கொண்டிருந்தது. அந்தச் செய்தி உறையூர்க்கும் சென்று பரவிற்று.

மலையமானின் வீழ்ச்சியிலே உறையூர் மகிழ்ந்தது. எனினும், வளவனின் வரையற்ற வன்கொடுமையை எண்ணிக் கலங்கிற்று. **கோவூர்கிழார்** என்பாரின் உள்ளம் அப்போது எரிமலையாகக் குமுறிற்று. "இந்தக் கொடுமை உடனே தடுக்கப்படல் வேண்டும்; இது தமிழர் மரபுக்கே தீராப் பழியாகும்" என்று, எழுந்தார் அவர்.

உறையூர்ச் சோழன், கோவூர்கிழாரின் முடிவினை அறிந்ததும் திடுக்கிட்டான். "பெருமானே! மலையமான்களின் போக்கினாலே சோணாடு அடைந்த கொடுமைகள் தாங்கள் அறியாதன அன்று. கேவலம், சேரர் தரும் பொருளுக்காக, அவர்களுடன் சேர்ந்துகொண்டு, நம் நாட்டிலே அழிவு நடாத்தியவன் காரி. வில்லாற்றலிலே, சிறந்தோனாகிய கொல்லித் தலைவனைக் கொன்று, அவன் நாட்டை, நமக்கு அணித்தாயிருந்த எல்லைப்பகுதியைச் சேரருக்கு உரிமைப்படுத்தியவன் அவன். அதற்காக, அவனுடைய மக்களைக் கொல்வது அறமன்று; எனினும், அதனைத் தடுப்பதும் எளிதன்று. புகார் வளவன் கொண்டுள்ள சினத்தின் கடுமையை, அவனுடைய அறம் பிறழ்ந்த ஆணையே எடுத்துக் காட்டும். அதனால், தாங்கள் அங்குச் செல்லுதல் வேண்டா" என்றான்.

கோவூர்கிழார் அவன் சொற்களைக் கேட்டார். 'மன்னு! புகார் வளவன் சினம்கொண்டவன்; பாராளும் மன்னவன்; படை வலுவிலேயும் மிக்கவன்; கொண்ட செயல் கொடிதே யானாலும், கொண்டதை அங்ஙனமே முடிக்கும் வாய்ப்பும் உடையவன்; இருப்பினும், அவன் செயல் அறமன்று. தமிழ் நாட்டின் வழிவழி வரும் பண்பிற்கு மாறுபட்ட பழிச்செயல் அது. அவன் செயலைத் தடுத்தாகவேண்டும். அறத்தை நிலைநிறுத்த வேண்டும்' என்ருர்.

'பெருமானே! அவன் தங்கள் முயற்சியைத் தவருகக் கொண்டு, தங்களுக்கே கேடு விளைவித்து விட்டால்?' கவலையுடன் கேட்டான் உறையூரான்.

'கவலையே இல்லை! 'அறங்காக்கும் பணியிலே ஆவியை இழந்தோம்' என்ற அமைதி, எமக்கு உளது. அஃதன்றி, அறக் கொடுமையை எதிர்க்காது அமைந்திருக்கும் தன்மை எமக்குப் பொருந்தாது' என்று கூறிப், புறப்பட்டார் கோவூர்கிழார்.

புகாரை நோக்கி, மிகவும் விரைவாக அவருடைய பயணம் நடந்துகொண்டிருந்தது. அவர், புகாரை அணுகிய நாள், வளவனின் ஆணையை நிறைவேற்றும் அந்தக் கொடிய நாளாகவே இருந்தது. ஒரே ஒரு நாள் கழிந்த பின் வந்திருந்தாலும், அவரால் எதுவும் செய்ய முடியாது போயிருக்கும். அதற்கு அவர் மகிழ்ந்தார். கிள்ளி வளவனைக் காண்பதற்கு ஓடோடியும் சென்ருர்.

அங்கேயோ, தண்டனையை நிறைவேற்றும் ஏற்பாடுகள் நிகழ்ந்துகொண்டிருந்தன. அந்தக் காட்சியைக் கண்டதும், அவர் உள்ளம் சீற்றம் கொண்டது. சூழவும் குழுமியிருந்த சோழ நாட்டுப் படையினர்கள், இரக்கமற்ற அரக்கர்களாகவே அவரின் கண்களுக்குத் தோன்றினர். அவர்களை

ஊடறுத்துப் புகுந்துகொண்டு, களத்து நடுவிலே சென்றார் புலவர். அங்கே, அவர் கண்ட கொடிய காட்சி அவர் உடலைக் குலுக்கிற்று.

இரு இளஞ் சிறார்கள்; பால்மணம் மாறாத பச்சிளங் குழந்தைகள் நின்றிருந்தனர். போர்க் களிறு ஒன்று, அவர்களைக் கொல்வதற்கென நியமிக்கப்பெற்றது. அவர்களை நோக்கி வந்துகொண்டிருந்தது. அந்தக் கொடுஞ்செயலை நிறைவேற்றுவதற்கும் சிலர் அவ்விடத்தே நின்றிருந்தனர். சூழ நின்ற கூட்டமும், மன்னனும், அந்தத் தண்டனையின் நிறைவேற்றத்தினை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

குழந்தைகளோ, தம்மைச் சூழவும் நின்றிருந்த புதிய கூட்டத்தினரைக் கண்டதும், முதலில், அழத் தொடங்கி யிருந்தனர். ஆனால், யானை வருவதைக் கண்டதும், அவர் களின் உள்ளம், அந்த யானையை வேடிக்கை காணும் குழந்தைத் தன்மையிலேயே சென்றது. தம் அழுகையையும் மறந்து, அதனை வியப்புடன் நோக்கியவாறு மகிழ்வுடன் இருந்தனர்.

அவர்களுடைய பேதைமை, புலவரின் உள்ளத்தைக் கொடுவாளால் அரிவதுபோன்று, மிகுதியும் புண் படுத் தியது. அவர் குமுறல், சொற்களாக வெளியேயும் எதிரொ லித்தது.

'இந்தக் கொடுமையை நிறுத்துங்கள்! இவர்களைக் கொல்லாதீர்கள்! இது அறக்கொடுமை! இது அற நெறிக்கே மாறுபட்டது!" என்று, உரத்த குரலிலே முழங் கினார், அவர்.

அவையோர் திடுக்கிட்டனர். வளவனும் சிறிது வியப்பினாலே சற்று அயர்வுற்றான். அடுத்துச், சினம் அவனை முற்றவும் ஆட்கொண்டது.

"யார் அந்தக் கிழவர்? அவரை இங்கே இழுத்து வாருங்கள்' என்று, ஏவலரைப் பணித்தான்.

புலவரை இருவர் இழுத்துக் கொண்டு போய் வளவனின் முன்பாக விட்டனர். அவரைக் கண்டதும், அவன் திடுக்கிட்டான். அவரை அவன் அறிவான். 'கோவூர் கிழார்!' என, அவன் வாய் வியப்பினால் முணு முணுத்தது.

புலவரைக் கொணர்ந்த பணியாளர்களை விழித்து, "அவரை விடுங்கள்; அவர்தாம் கோவூர்கிழார்; பெரும் புலவர்; அவரை யான் அறிவேன்" என்றான்.

அவர்கள் புலவரை விடுவித்ததும்,'புலவர் பெருமானே! வாருங்கள்! உறையூரின்று எப்பொழுது வந்தீர்கள்? தாங்களோ இவ்வாறு எதிர்ப்புக்குரல் எழுப்பியது?' என்றான், வளவன்.

'நானே தான், வளவனே! நின் செயல் அறமன்று. உறையூரிலிருந்த யான் இந்த ஆணையைக் கேட்டதும் ஓடோடி வந்தேன். இதனை உடனே நிறுத்திவிடுக. அந்தக் குழந்தைகளைக் கொல்லுதல் வேண்டா' என்றார், புலவர்.

'பெருமானே! தங்கள் சொற்களை ஏற்க இயலாமைக்கு வருந்துகின்றேன். இவர் என் பகைவனின் மக்கள். இவர்களைக் கொல்விப்பது முள்மரத்தை இளைதாகக் களைவது போன்றதாகும். இதனை அரசியல் மரபறிந்தோர் அறிவர். தாங்கள் இதனிடையே தலையிடுதல் வேண்டா. தங்களால் இதனைக் காணமுடியாது என்பது இயல்பே. தாங்கள் அரண்மனையிற் சென்றிருங்கள். இதனை நிறைவேற்றி விட்டு, யான் அங்குத் தங்களைக் காண வருகின்றேன்" என்றான் வளவன், அமைதியாக.

புலவர்க்கோ, வளவனின் சொற்கள், வெந்த புண்ணில் வேல் பாய்ச்சியது போன்ற தன்மையவாயிருந்தன. அவர் கண்கள் சிவந்தன; உடல் பதறியது; அவனை எதிர்க்கவும் அப்போது அவர் துணிந்தார்.

'வளவனே! நீயோ புறவின் துன்பத்தை அல்லாமலும், மற்றும் பல காலத்தும், பற்பல இடுக்கண்களையும் நீக்கி, அருளாளராகத் திகழ்ந்த சோழரின் வழிவந்தவன். இவர்களோ, அறிவினாலே உழுது வாழ்வு நடத்துபவரான புலவர்களின் வறுமைக்கு அச்சங்கொண்டு, தம்மிடம் உள்ளதைப் பகுத்து உண்கின்ற தண்மையான அருள் நிழலிலே வாழ்ந்த மலையமான்களின் மக்கள். களிற்றைக் கண்டு, தாம் அழுத அழுகையையும் நிறுத்தியவராக, அழமறந்து நிற்கும் புல்லிய குடுமியை உடைய சிறுவர்கள். இங்கே நிற்கும் கூட்டத்தை மருட்சியுடன் நோக்கிப் புதியதான ஒரு வருத்தத்தையும் உடையவராக இருக்கின்றனர். நான் சொல்வன இவையே. நீயும் என் பேச்சைக் கேட்டனை. ஆயின், இவர்களை விடுவதோ, அன்றிக் கொல்வதோ, நீ விரும்பியதனைச் செய்வாயாக'' என்றனர்.

அவருடைய பேச்சு மன்றம் முழுவதுமே எதிரொலித்தது. மன்னனின் தலை கவிழ்ந்தது. 'சிபியின் வழிவந்தவன் சிறுவர்களைக் கொல்வதோ?' அவன் சிந்தனை தெளிவுற்றது. சினத்தால் மூடியிருந்த அவனுடைய அறிவுக்கண்கள் அப்போது திறந்தன.

"அவர்களைக் கொல்லவேண்டா; விட்டு விடுங்கள்; நன்முறையிற் பேணி நாமே வளர்த்து வருவோம்" என்றான். அவை, அவன் பேச்சைக் கேட்டு ஆரவாரித்தது. புலவர் மகிழ்ந்தார்; சிறுவர்களோ நடந்தன எதனையும் அறியாராய் விளங்கினர்.

"பெருமானே! தக்க வேளையிலே வந்து என்னைப் பழியினின்றும் காத்து அருளினீர்கள். உங்களுக்கு நான் மிகக் கடமைப் பட்டுள்ளேன்' என்று, கோவூர்கிழாரைப் போற்றினான் கிள்ளிவளவன். 'என் அவையினர் இதனை முன்பே எனக்குத் தெளிவுபடுத்தி இருக்கலாமே?' என்றும், அவர்களை நொந்து கொண்டான்.

'அவர்கள் நின்னைக் கண்டு அஞ்சினார்கள். யானோ அறத்தின் துணையினையே பெரிதாகக் கொண்டேன். அதன் வலு எனக்கு உள்ளதனால் நின்னை எதிர்க்கவும் வேண்டிய ஆற்றல் பெற்றேன். அறம் ஒன்றுதான் வலிமை உடையது; அதனின்றும் பிறழ்பவர் தம்மை அறியாதே வலியிழந்து போகின்றனர்' என, அறத்தின் செம்மையை விளக்கினார் புலவர்.

அந்தச் சிறுவர்கள் சோழனின் வளர்ப்புப் பிள்ளைகளாக, வளமுடன் வளர்ந்தனர். சோணாட்டு மாவீரர்களுள் ஒருவனாகப் புகழ்பெற்ற சோழிய ஏனாதி திருக்கண்ணன் அவர்களுள் ஒருவன். பாரிவேளின் மகளிரை மணந்த மலையமானின் மக்கள், இவ்விருவர்களுமே யாவர் என்று வரலாறு கூறும்.

மன்னனையும் எதிர்த்து, மாபெருஞ் செயலாற்றிய கோவூர் கிழார், தமிழக வரலாற்றிலே நிலையான இடம் பெற்றுவிட்டனர்.

அறம் வெல்லும்; அறத்தின் வல்லமை பெரிது; அதற்கு முன் அரசும் பிறவும் மிக மிக எளிதானது! இந்தப் பேருண்மையை நிலைநிறுத்தப் போராடிய அவரை நாமும் போற்றுவோமாக.

# 5. புலவரைக் காத்த புலவர்

கோவூர்கிழார் என்னும் புலவர் பெருமான், மலையமானின் மக்கள் உயிரைக் காப்பதற்காகச் சோழமன்னனை எதிர்த்துச் சென்று, வெற்றிபெற்ற அறப்போரினைப் பற்றிச் சொன்னோம். இந்தப் பகுதியில், அவர் புலவர் ஒருவரின் உயிரினைக் காத்து, அவரை மீட்டுவந்த அறப்போர் நிகழ்ச்சியினையும் காண்போம்.

சோழர்களின் குடி இரண்டுபட்டுக் கிடந்தது. நலங்கிள்ளி என்பான் ஒரு பகுதியினைத் தன்வயமாக்கிக் கொண்டு ஆண்டுவந்தான். அவன், புலவர் பெருமக்கள் பால் அன்புடையோனும், நல்லாட்சி நடத்துவோனும், போர்த்தொழிலிலே வல்லவனும் திகழ்ந்தான். நெடுங்கிள்ளி என்பான், சோழ அரசு தனக்கே உரியதென வாதிட்டான். சோழ நாட்டின் மற்றொரு பகுதியினைத் தன்வயமாக்கிக் கொண்டு அவனும் ஆண்டு வந்தான்.

இவ்விருவருடைய பகைமையும் எல்லை கடந்து சென்று விட்டது. இருவருள் நலங்கிள்ளி வன்மை உடையவனாகத்

திகழ்ந்தான். 'நெடுங்கிள்ளியை அழித்து விடுவது' என்ற முடிவோடு, பெரும் படை திரட்டிக்கொண்டு சென்றான்.

சோழன் நெடுங்கிள்ளி, அப்போது, தனக்குரிய கோட்டைகளுள் ஒன்றான ஆவூர்க் கோட்டைக்குச் சென்றிருந்தான். நலங்கிள்ளி, அங்கேயே சென்று, கோட்டையை வளைத்து முற்றுகையிட்டான். நெடுங்கிள்ளி செய்வதறியாது திகைத்தான். கோட்டைக் கதவை அடைத்துக் கொண்டு உள்ளேயே இருந்துவிட்டான்.

நலங்கிள்ளியின் படைகள் ஊரை வளைத்துக் கொண்டதுடன் அமையாது, நாட்டிலே பலவிடத்தும் சென்று பாழ்படுத்தவும் தொடங்கின. கோட்டைக்குள்ளே இருந்தோர் வெளியே செல்லமுடியாதவாறு வருந்தினர். மக்களின் அல்லல் மிகுதியாயிற்று. புலவர் கோவூர் கிழாரின் உள்ளம் அதனால் கொண்ட வருத்தமும் மிகுதியாயிற்று. அவர் நெடுங்கிள்ளியிடம் சென்றார்.

"நின் போர்யானைகளைப் பார். குளத்திலே படிந்து நீராடாமலும், உண்பதற்கு நெற்கவளம் முதலியவற்றைப் பெறாமலும் வருந்தியவைகளாகத், தாம் கட்டுண்டிருக்கும் கம்பங்களைச் சாய்த்தனவாக, நிலத்திலே கிடந்து, கைகளைப் புரட்டிக்கொண்டே துடித்துக்கொண் டிருக்கின்றன. குழந்தைகள் பால் பெறாதனவாக அழுகின்ற கூக்குரல் மிகுதியாயிருக்கிறது. மகளிர் பூக்களால் தங்கள் கூந்தலை அணி செய்யாதவராகிக் கவலையிலே மூழ்கியவரா யிருக்கின்றனர். குடிக்கும் நீரும் அற்றுப்போயிற்று. குடிகள், தண்ணீரற்ற தங்கள் வீடுகளிலிருந்து, வருந்திக் கூப்பிடும் கூப்பீடும் பெரிதாயிருக்கின்றது. இவைகளை அறிந்தும்,

நீ நாணுமலும், இவற்றுக்கு இரங்காமலும் இனிதாக வாழ்ந்துகொண்டு இருக்கின்றாயே? இது மிகவும் கொடிய தாகும். வளமிகுந்த குதிரைப் படைகளை உடைய தோன்றலே! நீ அறத்தின்படி நடப்பவனாயின், நின்னை முற்றி இருப்பவனிடம், 'இக்கோட்டை நினது!' எனக் கூறித் திறந்து, அவனிடத்திலே ஒப்பித்து விடுவாயாக. அன்றி, நீ வீரமுடையவன் ஆனால், போர்வினை மேற் கொண்டு, கதவுகளைத் திறந்து, அவன் படைமேற் செல் வாயாக. இரண்டும் செய்யாமல், இப்படி அடைத்துக் கொண்டிருப்பது வெட்கப்படுவதற்கு உரிய செயலாகும்'' என்றனர்.

புலவரின் சொற்களைக் கேட்ட நெடுங்கிள்ளியின் உள்ளத்தேயும் சினம் மிகுந்தது. எனினும், அவர் சொற் களின் உண்மையினையும் உணர்ந்தான். அவனால், நெடிது போரிட்டு நலங்கிள்ளியை வெல்வதும் இயலாததாயிருந்தது. எனவே, தன் படையுடன், கோட்டைக் கதவுகளைத் திறந்துகொண்டு, நலங்கிள்ளியின் படைகளினூடே புலி யெனப் பாய்ந்தான். அவைகளை ஊடறுத்துக் கொண்டு, உறையூர்க்கும் சென்று சேர்ந்துவிட்டான். ஆவூர்க் கோட்டை நலங்கிள்ளிக்கு உரியதாயிற்று.

அப்படி, அவன் ஆவூர்க் கோட்டையிலே இருந்த பொழுது, 'இளந்தத்தன்' என்னும் பெயருடைய புலவர் ஒருவர், அவனைக் கண்டு பாடிப் பரிசில் பெற்றுச் செல்லும் கருத்துடனே சென்றனர். நலங்கிள்ளியும் அவரை அன்புடன் வரவேற்றான். அவருக்கு நல்லுணவும் பிறவும் அளித்துக் களிப்புறச் செய்தான். பல்வகையான பரிசில்களை நல்கிப் போகவும் விடுத்தான்.

ஆலூரினின்று புறப்பட்ட இளந்தத்தன் நலங்கிள்ளி தந்த பரிசில்களால களிப்புத் துள்ளுகின்ற உள்ளத்தோடு, உறையூர் நகருக்கு வந்து சேர்ந்தார். நெடுங்கிள்ளிக்கும் நலங்கிள்ளிக்கும் இடையே இருந்த பகைமையை அவரும் அறிவார். எனினும், அது தமக்கே துன்பமாக அமையும் என, அவர் ஒருபோதும் நினைக்கவே இல்லை.

உறையூர்க் கோட்டைக் காவலர்கள், தம் நகரினை நோக்கி வந்து கொண்டிருந்த இளந்தத்தனுரை, வாயிலி லேயே தடுத்து நிறுத்தினர். "தாம் யாவரோ? எங்கிருந்து வருபவரோ?" என, விழிப்புடன் வினவினர்.

"யாம் ஒரு புலவர். ஆலூரினின்றும் வருகின்ருேம். இவை அனைத்தும் நலங்கிள்ளி எமக்குத் தந்த பரிசில்கள்" என்று, இளந்தத்தன் விடையளித்தார்.

"யாமும் நினைத்தோம். அது சரியான செய்தியே என்பதற்குத் தாங்கள் சான்றுகள் காட்டுதற்கு இயலுமோ?" என்றனர், காவல் காத்து நின்ருேர்.

"சான்றுகள் எதற்காகவோ? யாமே புலவர் என்கின் ருேம். புலவர்க்கு, அடையாத கதவினையுடையது நெடுங் கிள்ளியின் உறையூர் என்றனரே?" என்றனர், புலவர்.

'இவர் பேச்சிலே யான் ஐயம் கொள்ளுகின்றேன். புலவர் போர்வை போர்த்து வருகின்ற ஒற்றன் இவன். இவனை நம்புதல் வேண்டா" என்ருன், ஒருவன்.

'இருக்கலாமோ?' என்ற ஐயத்துடன், தன் குரலிலே கேள்விக்குறியோடு நின்ருன், இன்னொருவன்.

'அதோ, நம் தலைவனே வருகின்றான். பொறுப்பினை அவனிடமே விட்டுவிடுவோம்' என்றனர் அவ்விருவரும். அவர்கள் குறிப்பிட்ட அந்தத் தலைவனும் வந்து சேர்ந்தான். காவலாளிகள் அவனை வணங்கினர்.

"எச்சரிக்கையாக இருங்கள். உறையூர்க் கோட்டையின் உறுதியை அறிவதற்கென, ஆலூர் ஒற்றர்கள் வந்து உலவுகிறார்கள் என்னும் செய்தியினை, இன்று நம்முடைய ஒற்றர் தலைவன் விடுத்துள்ளனன். ஆகவே, புதியராக வருபவர் எவராயினும், அவரிடத்தே சற்று விழிப்பாகவே இருங்கள்" என்றான், தலைவன்.

"மேலும், அவர்கள் எத்தகைய வேடமிட்டு வருபவர் என்றும் அறிவதற்கில்லை. ஆகவே, உங்களின் கண் காணிப்பு மிகுதியாக இருக்கவேண்டும்" என்றும், தலைவன் வற்புறுத்தினான். அப்போது, அவன் கண்கள், தம்மைக் காவலாளிகள் ஐயுற்றதன் காரணமாகத் தயக்கத்தோடே நின்ற புலவர் இளந்தத்தனாரைச் சந்தித்தன.

'யார் இவர்? இவரை ஏன் இங்கு வரவிடுத்தீர்கள்? புதியவர் போன்று காணப்படுகின்றனரே?' என்றான் தலைவன்.

'புலவர் என்றனர்; ஆலூரினின்றும் வருகின்றனராம்; அவரிடம் ஏராளமாகப் பொன்னும் பொருளும் உள்ளன. ஒற்றரோ எனக் கருதி வினவிக் கொண்டுள்ளோம்" என்றனர், காவலாளிகள்.

"ஒற்றர் என்றதும், தலைவனின் கண்பார்வையிலே சற்றுக் கடுமை தோன்றிற்று. அவன் உதடுகள் ஒன்றை

யொன்று இறுக்கிக்கொண்டன. புலவர் போர்வையிலேயும் ஒற்றரோ? இவரைக் கொண்டு செல்லுங்கள்" என்றான், தன்னோடு வந்த ஏவலர் இருவரிடம்.

புலவர் கதறினர். "அந்தோ உறையூரே! இதுவோ நீ புலவர்க்குத் தருகின்ற பரிசில்? நெடுங்கிள்ளியே! நீ நல்லவன் என்றனரே? நின் காவலாளிகளின் மடமையைக் காணாயோ?" என்று கூவிக், கண்ணீர் உகுத்தனர்.

"பேசாது, அமைதியாகச் செல்லுங்கள். நன்கு ஆராய்ந்தே தண்டனை அளிப்போம். ஒற்றர் அன்றெனில் வீணே புலம்புதல் எதற்காகவோ?" என்றான், தலைவன்.

அதற்குள் புலவரைக் கொண்டு சென்றோர், அவர் குரல் தலைவனின் செவிகட்குக் கேளாத தொலைவிற்குச் சென்றுவிட்டனர். தலைவனும், மீண்டும் தன் ஆட்களை எச்சரித்து விட்டு, அடுத்த கோட்டை வாயிலை நோக்கி விரைந்தான்.

சிறையிலே அடைப்பட்டுக் கிடந்த புலவர் பெரிதும் மனம் வருந்தினர்; வாடி நலிந்தார். அவருடைய உள்ளம் பெரிதும் புண்பட்டது. தம்முடைய அறியாமை, தமக்கு உரிய தண்டனையினைத் தந்துவிட்டது என்று குமுறினர்.

"நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் பெரும்பகை என்பதைக் கேட்டும், அவர்களின் தமிழ்ப் பற்றினை மட்டுமே நம்பியவனாக வந்து இப்படி அகப்பட்டுக்கொண்டேனே? இனி, எப்படி இதனின்றும் விடுபடப் போகின்றேன்?" என்று, புலம்பிக் கொண்டே இருந்தார்.
யிலே, அவரை அறவோர் முன்னர்க் கொண்டும்

வைத்தனர். அறவோர் அவையும் இளந்தத்தனின் மீதுள்ள குற்றத்தைக் கேட்கத் தொடங்கிற்று.

உறையூர் மன்றம் அறத்திற்குப் பெயர் பெற்றது. அவையோர் அனைவரும் நல்ல அறிவும் ஆன்றமைந்த பண்பும் உடையவர்கள். அவர்கள் முன்னிலையில் புலவர் இளந்தத்தனைக் கொண்டு நிறுத்தினர் காவலர்.

'ஆன்றோர்களே! இதோ குற்றஞ் சாட்டப் பெற்றிருக்கும் இவரை யாங்கள் உறையூர்க் கோட்டை வாயிலிற் சிறைப்பிடித்தோம். நம் கோட்டையின் வலிமை பற்றியும், நம்முடைய பாதுகாப்பு ஏற்பாடுகள் பற்றியும், அறிவதற்கென, ஆவூரினின்று வந்திருக்கும் ஒற்றர் இவர் என்பது எங்கள் குற்றச் சாட்டு' என்றனன், காவல் தலைவன்.

'நும்மீது சாட்டுகின்ற குற்றச் சாட்டினைக் கேட்டீரன்றோ? யாது நும் விடை?' என, அவைத்தலைவர் இளந்தத்தனை நோக்கிக் கேட்க, அவரோ, கலக்கமுற்றவராக வாயடைத்து நின்றார்.

'பெரியவரே! நும்மீது சாட்டும் குற்றமோ பெரிது. நாட்டு மக்கள் பெரிதும் வெறுப்பது. ஆகவே, நும்பால் குற்றமில்லை என்பது உண்மையாயின், நீர் மறுத்துச் சான்றுடன் உரைக்கலாம். வாளாவிருப்பின் அது நன்றன்று' என, மீண்டும் உரைத்தனர் அவைத் தலைவர்.

'ஐயனே! யான் யாதும் அறியேன். தமிழ் பேசும் என்னுடைய நாவானது என்றும் பொய் கூறி அறியாதது. ஆவூரிலிருந்து வருபவன் யான் என்பது உண்மை. நலங்கிள்ளியால் போற்றிப் பரிசில்தந்து விடுக்கப்பெற்றவன்

என்பதையும் யான் மறுக்கவில்லை. உறையூருக்கு வந்து, உறையூரின் பெருமையைக் காணவும், உறையூர் மன்னனைப் பாடிப் பரிசில் பெற்றுச் செல்லவுமே கருதியவன் யான். வேறு எதுவுமே அறியேன்" என்றார்.

"அஃதன்று அவையோரே; அஃதன்று! இவர் புலவர் போர்வையுள் மறைந்து வந்துள்ள ஒற்றர். அதற்குரிய பல சான்றுகள் எம்மிடம் உள்ளன. அவற்றை அவையினருக்கு மெய்ப்பிக்க விரும்புகின்றேன்" என்றான், காவல் தலைவன்.

'தமக்கு எதிராகச் சான்றுகள்!' புலவரால் காவல் தலைவனின் சொற்களைக் கேட்கவே முடியவில்லை. அவர், சோர்வுற்றுத் தளர்ந்து நின்றார்.

'சான்றுகளை மெய்ப்பிக்கலாம்' என்றனர், அவையத்தார்.

அவர் கொணர்ந்திருந்த பரிசில் பொருள்களை ஒவ்வொன்றாக எடுத்துக்காட்டி, அவற்றை நலங்கிள்ளி வழங்கியதெனக் காவலர் தலைவன் கூறினான். அதனைப் புலவர் மறுக்கவில்லை. 'அது அவருடைய ஒற்றன் வேலைக்குக் கொடுத்த கைக்கூலியே' என்றான் அவன். புலவர் சீற்றங் கொண்டார்.

'அறந்தவறா உறையூர் அவையத்தே நின் பொய்மையும் இன்று பேசப்படுகின்றதே? அந்தோ! இதுவோ, யாம் அறிய வந்த உறையூர்?' என்று, அவர் குரல் முழங்கிற்று.

'அவையினைப் பழித்தல் கூடாது. நும் குற்றம் மெய்ப்பிக்கப்பெற்ற பின்னரே நீர் குற்றவாளியாகின்றீர்.

அதற்குள், இவ்வாறு நீர் சினங்கொள்வது தவறு'' என்றனர் அவைத்தலைவர். குற்றஞ் சாட்டுபவன் மேலே தொடர்ந்தான். ஆவூர்க்கண் இருந்து உறையூர்க்கு ஒற்றர் பலர் வருவது பற்றிய உறையூர் ஒற்றனின் செய்தியும், அதனைத் தொடர்ந்து அவர்கள் மேற்கொண்ட பாதுகாப்புக் களும், புலவரின் ஐயமுறத்தக்க நிலையும், எல்லாம் காவல் தலைவனால் விளக்கப்பெற்றன. அவன், கோவையாகத் தொடுத்துச் சொல்லச் சொல்ல, இளந்தத்தனுக்குத், தாம் அங்ஙனமும் அனுப்பப் பெற்றிருக்கலாமோ என்ற கலக்கமே ஏற்படத் தொடங்கிற்று. தம்மை மெய்ப்பிக்க வகையின்றித் தத்தளித்தார், அவர்.

அவையும் நெடுநேரம் ஆராய்ந்தது. முடிவிலே, "குற்றத்தின் கடுமையும், அதன் சிக்கலும், பெரிதாயிருக் கின்றன. ஆகவே, இவரை மன்னர் முன்பு கொண்டு சென்று விடுக்குமாறு அவை முடிவு செய்கிறது. உறுதி யான முறையிலே குற்றம் மெய்ப்பிக்கப்படவில்லை என்பது உண்மையெனினும், உறுதியான வகையிலே குற்றமற்றவர் என்பதும் தெளிவாக்கப் பெறவில்லை. மேலும், இத்தகைய போர் நிலவும் காலத்திலே, புதியவர் ஒருவர், நேராக ஆவூரி னின்றும் உறையூர்க்கு வருவது காரணமின்றி இருக்க முடியாதெனவும் அவை கருத்துக் கொள்ளுகிறது. ஆகவே, இதன் முடிவினை மன்னரின் கருத்துக்கே விட்டுவிடுமாறு அவை முடிவு செய்கிறது' என்றனர் அவையோர்.

இளந்தத்தனார் மன்னன் நெடுங்கிள்ளியின் முன்னர் நிறுத்தப் பெற்றனர். அவையின் முடிவும் அவனிடத்தே அறிவிக்கப் பெற்றது. 'குற்றத்தைச் செய்யாதவரென்று தெளிவாக மெய்ப்பிக்க வழியில்லை' என்பது உண்மை

யானுல், இவரை யாம் மன்னிப்பது இயலாது. அமைதியான காலம் என்முல், அதுவே இயல்பாயிருக்கலாம். ஆனுல், இதுவோ போர்க் காலம். ஆகவே. இவரைப் பத்து நாட்கள் சிறையிலிட்டு வையுங்கள். அதற்குள், இவரால் தம் நிலைமையினைத் தெளிவுபடுத்த இயலவில்லை எனில், இவரைக் கொன்றுவிடலாம்" என்முன், மன்னன்.

அவனுடைய ஆணையைக் கேட்ட இளந்தத்தன் அந் நிலையே மயக்கமுற்று வீழ்ந்துவிட்டனர். காவலர்கள் சிலர் அவரைத் தூக்கிச் சென்றனர். நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன.

புலவரும் சிறையிலே வாடித் தவித்துக் கொண்டிருந் தார். எவ்விதமான முன்னேற்றமும் ஏற்படவில்லை.

'ஒற்றன் ஒருவன், புலவர் வேடத்திலே வந்து, உறை யூரிலே நுழைந்தான். அவன் சிறையிலே இடப்பெற் றுள்ளான். அவனுக்குப் பத்தாவது நாள் உயிர்போக்கும் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது' என்ற செய்தி, காட்டுத் தீயினைப் போல நாற்றிசையும் பரவிற்று.

அப்போது, கோவூர் கிழார் எங்கோ வெளியூர் சென்றிருந்தனர். அவர் காதுகளிலே செய்தி விழுந்ததும், அவர் பெரிதும் புண்பட்டார். 'ஒற்றர்கள் புலவர்கள் வேடத்திலா?' அந்தோ! புலவரைப் போற்றும் தமிழகமே! நின் தூய பண்பினைச் சிதைக்கவும் துணிந்து விட்டனரே, சிலர்!' என்று, அவர் வருந்திஞர்.

ஒருக்கால் அந்தத் தண்டனைக்கு உரியவர் உண்மையிலே புலவராயிருந்தால்? தம் நிலையைத் தெளிவுபடுத்தும் வகை யறியாத எளிய உள்ளம் உடையவராக அவர் இருக்க,

அவரைத் தவருக நெடுங்கிள்ளியும் தண்டித்திருந்தால்?' இவ்வாறு நினைக்கவுமே கோவூர் கிழாரின் உள்ளம் பெரிதும் கலக்கம் கொண்டது.

'குற்றஞ் சாட்டப் பெற்றவர் புலவர்' என்று கூறிக் கொள்ளுகின்ருர் என்றதும், அவர் உள்ளத்திலே எரிமலையே குமுறி எழுவது போன்றிருந்தது. புலவர்கள் என்ற தகுதியுடையோர் பலருக்குமே அது தீராத பழியாகும் என்றும் பொருமினுர். அதன் உண்மை நிலையைக் காணல் வேண்டும், கண்டு அதற்கு உரியன செய்தல் வேண்டும் எனத் துடிதுடித்தார். உறையூரை நோக்கித் தம் பயணத்தையும் தொடங்கினுர்.

உறையூருக்கு வந்ததும் வராததுமாக, நேரிலே சிறைக் கூடத்திற்குச் சென்று, அந்த இளந்தத்தனைக் கண்டு, தம்மைத் தெளிவு செய்வித்துக் கொள்ளக் கருதினவராக, அவ்விடத்தை நோக்கி விரைந்து சென்ருர். சிறைக்கூடக் காவலன் சொல்லிய செய்தி, அவரை அப்படியே இடிந்து போகச் செய்தது.

'அந்த ஒற்றனைச் சற்று முன்புதானே கொலைக் களத்திற்குக் கொண்டு சென்ருர்கள்' என்ருன், அவன்.

புலவர் புழுவாகத் துடித்தார். தம்மால் எவ்வளவு ஓட இயலுமோ, அவ்வளவு வேகமாகக் கொலைக்களத்தை நோக்கி ஓடினுர்.

ஒன்றிரண்டு முறை வழியிலே கல்லிடறியதனையும் அதனுல் தாம் கீழே விழ நேர்ந்ததனையும் கூட, அவர் பொருட்படுத்தவில்லை. ஏதோ ஒரு பேராற்றல், தம்மைச் செலுத்துவது போன்று, ஓடிக்கொண்டே இருந்தார்.

நல்ல காலம்!

கொலைத் தண்டனை நிறைவேற்றப் பெறவில்லை. சங்கிலிகளால் பிணிக்கப்பெற்றுத், தலை குனிந்தவாறு, ஊரவர் தூற்ற, ஒடிந்த உளத்தினராகச் சென்று கொண்டிருந்த இளந்தத்தனைக் கண்டார். அவர் முகம் சற்றும் களங்கம் அற்றதாகத் தோன்றியதனையும் அறிந்தார். "இவர் குற்றம் செய்பவரல்லர். இவரைக் காப்பாற்றியே தீரவேண்டும்' என்று, தம் மனச்சான்று தம்மைத் தூண்டுவதையும் உணர்ந்தார்.

'நிறுத்துங்கள்! இவரைக் கொல்லுதல் கூடாது. இவர் குற்றமற்றவர். இவர் பழியறியாத பண்பாளர். இவர் புலவர்! இவரைக் கொன்று பழி செய்யாதீர்கள்"என்று கதறினர்.

கொலைக் களத்திற்கு, அந்தத் தண்டனை நிறைவேற்றப் படுவதைக் கண்காணிப்பதற்குச், சென்று கொண்டிருந்தான் ஒரு சோழர் தளபதி. அவனுடன் அறவோர் அவையத்து உறுப்பினர் ஒருவரும் இருந்தனர். அவர்கள் கோவூர் கிழாரின் குரலைக் கேட்டதும் திகைப்புற்று நின்றனர். அவருடைய நிலையினைக் கண்டதும் அவர்கள் சற்றுக் கலக்கமும் கொண்டனர். அவரை முன்பே அறிந்தவர்கள் அவ்விருவரும். தம் மன்னனிடம் பெரிதும் செல்வாக்குடையவர்; சிறந்த தமிழ்ச் சான்றோர் என்றெல்லாம் தெரிந்தவர்கள் அவர்கள்.. ஆகவே, சற்று நேரம் திடுக்கிட்டு, ஏதும் செய்யத் தோன்றுதவராக நின்றுவிட்டனர்.

தளபதி, அந்த மயக்கத்திலிருந்து முதலிலே விடுபட்டான். 'இளந்தத்தன் தன் உயிரைக் காப்பதற்கு யாதோ தெய்வமொன்று குரல் கொடுக்கின்றதோ' என நினைத்து, கோவூர் கிழாரை வணங்கினுர். தன்னை உய்விக்க வந்தவர்

யாவரோ? என, அறிவற்குத் துடிதுடித்தார். 'தாங்கள் தெய்வமாகவே வந்தீர்கள்; தங்களை யான் அறியலாமோ?, என்றார்.

கோவூர் கிழார், அவன் கேள்விக்கு விடை சொல்லு முன்பே, தளபதி கூறத் தொடங்கினன்."அவர்தாம் கோவூர் கிழார். எம் மன்னர் போற்றும் புலவர் பெருமான்'' என்றான்.

'கோவூர் கிழார்! கோவூர் கிழார்!' என்ற குரல்கள் எப்புறமிருந்தும் எழுந்தன. தளபதி கடமையுணர்விலே அழுத்தமாக விளங்கியவன். அதனால், அவன் கோவூர் கிழாரின் தடையை விரும்பவில்லை. அதனை விலக்கித் தன் பணியை நிறைவேற்றி முடித்துவிடவே முயன்றான்.

'பெருமானே! இவரைக் கொல்விக்க வென்பது அரசின் ஆணை. அதனை நிறைவேற்றுவது என் கடமை. தாங்கள் அதனைத் தடை செய்வது முறையன்று. தங்கள் பெருமையினை அறிந்தவன் யான். எனவே, அருள்கூர்ந்து விலகிச் செல்லுங்கள்'' என்றான், அவன்.

'தளபதி! நின் கடமை உணர்வினை நான் போற்று கின்றேன். அதனினும் பெரிதான, அறநெறி பிறழாத உறையூரின் பெருமையைக காக்கத் துடிதுடிப்பவன் யான். இவரைக் கொல்லாதீர்கள். இவர் குற்றமற்றவர் என்று என் மனச்சான்று கூறுகிறது. புலவர்களின் தகைமையை நீங்கள் அறியமாட்டீர்கள். பகைமையால் அறிவு மழுங்கிப், பார்த்தவரை எல்லாம் ஒற்றரென மயங்கிக், கொன்று பழிக்கு ஆளாகவேண்டாம்' என்று, கோவூர் கிழார் கூறினார்.

'அவனோ கேட்பதாயில்லை. தங்களை ஒதுக்கிவிட்டு யான் மேற்செல்வேன்; அது என் கடமை' என்று, முன்சென்றான் தளபதி.

'பெருமானே! நீங்கள் அரசனின் ஆணையை எதிர்க்கின்றீர்கள். அவனுடைய நீதியைப் பழிக்கின்றீர்கள். இந்தக் குற்றங்கள் மிகக் கடுமையானவை. மேலும் பகைவரின் ஒற்றனைக் கொல்வதைக் கூடாதெனத் தடுப்பது தங்களையும் தவறாகக் கருதச் செய்துவிடும். எனவே, தாங்கள் சற்றே ஒதுங்கி நில்லுங்கள்' என்றான். அவரை வலிந்து அப்புறப்படுத்த அவனிடம் துணிவு பிறக்காததனாலேயே, அவன் அவ்வாறு அவரை அச்சுறுத்த முயன்றான்.

கோவூர் கிழாருக்கு அவன் பேச்சுச் சினத்தை எழுப்பிற்று. 'தளபதி! நீ இப்போது பேசுவது அறநெறி பற்றியது ஆயின், இவர் குற்றமற்றவர்; இவரைத் தண்டிப்பது தவறு; என்று நான் கூறுகின்றேன். ஆகவே, அதனைத் தெளிவுபடுத்தாமல், இவரைக் கொல்வதுதான் அறநெறிக்கு மாறுபட்டது. நான் இந்த ஆணையை மீறுகின்றேன். நின் கடமை என்னை ஒதுக்குவது அன்று. அறம் வாழவேண்டுமென்று விரும்பினால், அறம் பிறழாத உறையூர் அவையின் புகழ்கெடாதிருக்க நீ நினைத்தால், நெடுங்கிள்ளியிடம் சென்று முறையிடுக. அதுவரை இந்தத் தண்டனையை நிறைவேற்றுவது நிறுத்தப்பட வேண்டும்'' என்றார்.

தளபதிக்குக் கோவூர் கிழாரின் பேச்சுக்கு இசைவதற்கு மனமில்லை. ஆனால், அருகிலே நின்றிருந்த அறமன்ற உறுப்பினரின் உள்ளம் கவலையுறலாயிற்று. 'கோவூர் கிழாரின் பேச்சுக்குச் செவிசாய்ப்பது முறையேதான்.

எனவே, நம் மன்னனுக்குச் செய்தியனுப்புக. அவனிட மிருந்து உரிய ஆணை வருவது வரையிலும் நாம் காத்திருப் போம்' என்றனர்.

தளபதிக்கும் அது ஒரு வகையில் நல்ல முடிவாகத் தோன்றவே, உடனே, தன் ஏவலர்களுள் ஒருவனை மன்ன னிடம் விடுத்தான்.

நெடுங்கிள்ளி, அவ் வேளையிலே, தன்னுடைய போர்க் கருவிகளைப் பெருக்கும் திட்டங்களைப் பற்றித் தளபதி களுடன் ஆராய்ந்து கொண்டிருந்தான். ஏவலன் வந்து பணிந்து, 'மன்னவா! ஒற்றனைத் தங்கள் ஆணைப்படி கொல் வதற்குக் கொண்டு சென்றோம். ஆனால், அதனை நிகழ வொட்டாது தடுத்து நிற்கின்றனர் ஒருவர்!' என்றான்.

அதனைக் கேட்டதும், மன்னன் மட்டுமன்று, மற்றை யோரும் ஆர்ப்பரித்து எழுந்தனர். 'அந்தக் கொடியவன் யாவன்? அவனைக் கொன்றுவிட்டு ஆணையை நிறை வேற்றுக?' என்று சீறினன், நெடுங்கிள்ளி.

'செய்திருப்போம், பெருமானே! ஆயின், அப்படித் தடுப்பவர் கோவூர் கிழார். அதனாற்றான் தங்களிடம் வந்து தெரிவித்து ஆணை பெற்றுச்செல்ல விடுக்கப்பட்டேன்' என்றான், ஏவலன்.

'கோவூர் கிழாரா? என்னுடைய ஆணையை மறுத் தனரா?' மன்னன் சிந்தனையிலே ஆழ்ந்துவிட்டான். அவை யோரும், அவன் போன்றே செய்வது அறியாது அமைந்து விட்டனர். பின்னர், சிந்தனை கலைந்தவனாக, 'நானே வந்து கவனிக்கிறேன்' என்று சொல்லிக், குதிரைமீது பாய்ந்து

ஏறிக், கொலைக்களத்தை நோக்கி விரைந்தான். அவன் தளபதிகளும் உடன் சென்றனர்.

தன் ஆணை தடுக்கப்பட்டதை அறிந்த அவன் உள்ளம் கொதித்தாலும், கோவூர் கிழார் என்றதும் சற்று எண்ணவே தூண்டிற்று. கொலைக்களத்திற்கு வந்து, கோவூர் கிழாரின் முன்பாக அவன் நின்றான்.

'வாழ்க வேந்தே! வாழ்க நின் கொற்றம்! இந்தப் பழிச் செயலை நிறுத்தச் செய்க! இவர் ஓர் ஏழைப் புலவர்! இவரை நான் அறிவேன்!' என்று கதறினார் கோவூர் கிழார்.

'பெருமானே! இவர் யான் கேட்டதற்கெல்லாம் முறையாக விடையளித்திருப்பின் இந்த நிலையே ஏற்பட்டிராது. அதனால், பழிக்கு அவர்தாம் காரணர். அவர்மீது கொண்ட ஐயத்தைத் தெளிவிக்க அவரால் இயலவில்லையே? ஆகவே அவரைத் தண்டிப்பது என் கடமை. அதனைத் தடுக்கும் பெரும் பழியிலே தாங்கள் ஈடுபடலாமோ? அதனால் ஏவலர்களுக்கு வழி விடுங்கள்' என்று, அவன் கோவூர் கிழாரை முதற்கண் அமைதியாகவே கேட்டுக் கொள்ளத் தொடங்கினான்.

கோவூர் கிழாரின் கண்கள் கலங்கின. "வேந்தே! வள்ளல்களைப் பழமரம் நாடிச் செல்லும் பறவையினம் போல நாடிச் சென்று, தம் நாவால் இயன்ற அளவு போற்றிப் பாடி, அங்கே பெற்ற பரிசிலால் உள்ளம் மகிழ்பவர் பரிசிலர். அதனைத் தாமும் தம் சுற்றமும் உண்டு களித்துப், பொருளில் பற்றின்றிப் பிறருக்கும் கொடுத்து விடுபவர் அவர். தம்மைக் காக்கும் வள்ளல்களாற் பெறுகின்ற சிறப்

பின் காரணமாக வருந்தும் தன்மையுடையதே இப் பரிசில் வாழ்க்கை. சொற்போர்களுள் தம்மை எதிர்த்தோர் நாவடங்கி நாண, வென்று, பெற்ற பெருமிதத்தால் தலை யெடுத்து நடந்து, இன்புறுபவர் இவர். அஃதன்றிக் கொடுமை செய்தலையும் இவர் அறிவாரோ? எனினும், அரசாளும் செல்வரான உங்கள் போன்றே அறிவாளும் செல்வரான அவரும் புகழ்பெற்று விளங்குபவர் ஆவர். இதனை நீயும் அறியாயோ? அறிந்தனையாயின் இவரை விடு வித்து உபசரித்து விடுப்பாயாக!'' என்றனர்.

நெடுங்கிள்ளியின் உள்ளத்திலேயும் 'தன்னுடைய முடிவு பொருந்தாதது' எனத், தோன்றிற்று. அவன், உடனே, இளந்தத்தனை விடுவித்துத், தக்கவாறு உபசரித்து அனுப்பி வைத்தான். தன் ஆணையை மறுத்ததனாலேயே, தன்னைப் பழியினின்றும் காத்த கோவூர் கிழாரையும், உவப்புடன் போற்றினான்.

அவரும் உள்ளம் மகிழ்ந்தார். 'நின் ஆணையை மறுத் துப் போரிட முயன்ற என்னைப் பொறுத்துக்கொள்' என்றார், ஒருநாள் நெடுங்கிள்ளியிடம்.

''பெருமானே! தங்களின் அறப்போர் ஓர் உயிரைக் காத்தது; என்னுடைய அறத்தையும் நிலைநிறுத்தியது; உறையூர் அவையின் புகழையும் காத்தது; அதற்கு யானன்றோ தங்கட்குக் கடமை உடையேன்'' என்றான் மன்னன்.

'அறம் வெல்லும்! மறம் கொல்லும்!' என்று, கோவூர் கிழார் அறத்தின் தன்மையை விளக்கினார். அவர் உள்ள மும் அளவற்ற இன்பமுற்றது.

# 6. களிறு வழங்கிய புலவர்

பழந்தமிழ் நாட்டுப் புலவர் பெருமக்களுள், பெருஞ் சித்திரனுர் என்பவர் தமக்கென ஒரு தனித்தன்மை உடையவராக விளங்கிஞர் எனலாம். இவர், அருந்தமிழ்ப் புலமையும் அருள் உள்ளமும் அமையப்பெற்றவர். ஆதலின், பொருளைப் பேணிவாழுகின்ற மரபினையே, இவர் மனங் கொள்ளாதவராக விளங்கிஞர்.

வறுமைப் பெருந்துன்பத்திலே, இவர் வாடி அல்ல லுற்ற காலங்கள் பல. எனினும், இவரது வறுமையைப் போக்கவென்று வள்ளல்கள் மனமுவந்து பெரும்பொருள் வழங்கிஞலும், அவை அனைத்தையும் விரைவிலே தம் குடும்பமும் பிறரும் இன்புற்றிருக்கச் செலவழித்துவிட்டு, மீண்டும் பரிசில் நாடிச் செல்லும் தன்மை கொண்டவ ராகவே இவர் இருந்தனர்.

அங்ஙனம் நாடிச் சென்ற காலத்திலும், இவருடைய தகுதியை அறிந்து போற்ருது, கொடுக்கும் பொருளைப் பெற்றுக்கொள்ளுகின்ற இயல்பும் இவர்பால் இல்லை. அத்

தகைய பொருளை வெறுத்து, வேண்டாவென ஒதுக்கிச் செல்லும் உள்ளத்திண்மையும், இவரிடம் அமைந்து இருந்தது.

ஒரு சமயம், தம் குடும்பம் வறுமைப் பெருந்துயரினாலே அல்லற்பட்டு விளங்க, அது கண்டு ஆற்றாத பெருஞ் சித்திரனார், காடும் மலையும் பலப்பல கடந்து, தமிழகத்தே அந்நாளிலே வள்ளன்மை உடையோருள் ஒருவனாகத் திகழ்ந்த, வெளிமான் என்பானைக் காணச் சென்றனர்.

'வெளிமான் என்பவன், வெளியத்து வேளிர் குலத்துத் தலைவனாக விளங்கியவனாதல் வேண்டும்' என்பர் ஆன்றோர். வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்பவன் ஒருவன், பறவைகட்கும் பாதுகாவலனாக விளங்கிய செய்தியினைப் புறநானூறு, அகநானூறு முதலிய நூல்களினுள்ளே காணலாம்.

வெளிமானைக் காணச் சென்ற புலவர், அவருடைய போதாத வேளையோ யாதோ, காலமற்ற காலத்திலே சென்று சேர்ந்தனர். வெளிமான் உடல்நலமற்றுச் சாவின் தலை வாயிலிலே கிடந்துகொண்டிருந்தான். புலவரின் வரவினை அறிந்த அவன், அந்த நிலையினுங்கூடத், தன்னுடைய கொடுக்கும் பண்பினை மறந்துவிடவில்லை. தன் அருகே இருந்த தன்னுடைய இளவலான இளவெளிமானை நோக்கி, "தம்பி! இப் புலவர் பெருமானைத் தக்கபடி உபசரித்து அனுப்புக" என்று, கேட்டுக்கொண்டான். அவனுடைய ஆருயிரும் அடுத்துப் பிரிந்துவிட்டது.

புலவர் பெருஞ்சித்திரனாரின வறுமைத்
நாடி வந்த வள்ளலின் சாவினாலே வந்த பெருந்துயரம்

அளவுகடந்த தாயிற்று. அவர், அதனை நினைந்து நினைந்து கதறினர். 'தம்முடைய தீவினையேபோலும் வெளிமானின் உயிரைக் கொண்டது?' எனத் துடித்தார். நாட்கள் சிலவும் சென்றன.

இளவெளிமானிடம், புலவர், தாம் மீட்டும் தம் ஊர் செல்ல விரும்புவதைத் தெரிவித்தனர். அவன் வெளிமானைப் போன்ற வள்ளன்மை உடையவன் அல்லன்; ஆனல், இரந்து வந்தவர்க்கு ஏதாயினும் கொடாதவழி உலகம் இகழுமே என்ற உணர்வும் உடையவன். புலவரைப் போற்றும் பெற்றியன் அவனல்லன்; எனினும், இரப்பார்க்கு உதவுகின்ற கடமையுணர்வைக் கசப்போடேனும் நிறை வேற்றுவதற்கு அவன் மறக்கவும் இல்லை.

பெருஞ்சித்திரனருக்குச் சிறிதளவு பொருளினைத் தந்து, 'புலவரே! இப்போது இதனைக்கொண்டு சென்று வருக!' என்றனன், அவன்.

பெருஞ்சித்திரனர் வறியவர்தாம்; வறுமையினும் மிக மிகக் கொடிய வறுமையின்கண் கிடந்து அவர் குடும்பம் அல்லற்பட்டதும் உண்மைதான். எனினும், இளவெளிமான் கொடுத்த பொருளைப் பெற்றுச் செல்லுமளவு அவர் எளிமையான உள்ளம் உடையவர் அல்லர். அவனுடைய சிறுபொருளைத் தாம் ஏற்பதற்கில்லை என, அவர் மறுத்தனர். இளவெளிமான் சீற்றங்கொண்டான்.

'புலவரே! நீரோ இரவலர். எம்பால் வந்து எம்முடைய பொருளுக்காக எம்மைப் புகழ்ந்து பாடும் இயற்கையினர். அங்ஙனமிருக்கவும், யாம் கொடுத்ததைக் கொண்டு உள்ளம் அமைதியுருமல் மறுக்கவும் செய்தீர். நும்முடைய

செருக்குத்தான் என்னே? ஆயின், நீர் செல்க. இதற்கு மேலும் தருதற்கு யான் விரும்பவில்லை" என்றான்.

"புலியானது தான் எதிர்பார்த்து இருந்த களிற்று யானையான தன்னுடைய இரையானது தன் கைக்குத் தப்பிப்போனாலும், எலியினைக் கொன்று உண்ணத் துணியுமோ? துணியாது. ஆகலின், யாமும் செல்வோம். எம் பெருமையை விரைவிலே நீயும் உணரச் செய்வோம்" எனக் கூறிச் சென்றனர், அவர்.

அவர் உள்ளம் பெரிதும் புண்பட்டது. தம் வீட்டின் நினைவினாலே அவர் வேதனை மிகுதியாயிற்று. "நெஞ்சமே! கடல் மண்டு புனலின் இழுமெனச் செல்வோம். நன்மையுடைய பரிசில் விரைவிலே பெற்றுத் தருவோம். எழுக!" எனத், தம் உள்ளத்திற்குக் கூறியவாறே, அவர் வழி நடந்தார்.

அக் காலத்திலே, முதிரத்துக் கிழவனாக விளங்கியோன் குமணன் என்னும் சிறந்தோன் ஆவன். கடையேழு வள்ளல்களை ஒப்ப, அவனும் பெரிதும் வள்ளன்மை உடையோனாகத் திகழ்ந்தான். பெருஞ்சித்திரனார் அவனிடத்தே சென்றார். அவருடைய வீட்டின்கண் விளங்கிய அளவற்ற வறுமைநிலையினை அவன்பால் உரைத்து, அவனைப் போற்றிப் பரிசில் விரும்பினார்.

குமணனின் உள்ளம் பெரிதும் துணுக்குற்றது. 'தமிழ்ச் செல்வராகிய புலவரின் குடும்பம் உண்ணும் உணவற்றும் உழல்வதோ? என்னே கொடுமை?' எனக் குமுறினான்.

'பெருமானே! என் வறுமை அகலவேண்டும். என் அளவை அறிந்து காணுது, நின் அளவினை அறிந்து எனக்கு நல்குவாயாக.வறுமை ஒழிந்து, வளமான களிற்றின் மீது அமர்ந்து, யான் நின் புகழினைப் பாடிச் செல்லுதல் வேண்டும்' என்று, வேண்டிநின்ருர் புலவர்.

குமணன், அவர் விரும்பியதற்கும் மேலாக வழங்கி அவரைப் போற்றி விடுத்தான். செல்வருட் செல்வராகச், செம்மாந்த பெருநிலை வாய்க்குமாறு, பொன்னும் பொருளும் அணியும் பிறவும் அளித்து மகிழ்ந்தான். களிற்றின் மீதமர்ந்து, கண்டார், 'யாரோ செல்வமுடையவர் போலும், இவர்?' என, வியப்புடன் காணப், புலவரும் தம்முடைய இல்லத்தை நோக்கி விரைந்தார்.

அப்படித் திரும்பும்பொழுது, குறுக்கே வெளிமானின் நாட்டைக் கடக்கும் நிலையிலே, அவருடைய பழைய நினைவு எழுந்து அவரை ஆட்கொண்டது. 'என்னை அன்று பழித்த இளவெளிமானை யான் வெட்கி நாணச் செய்வேன்' என்று எண்ணினர். அவனூர் நோக்கிச் சென்ருர்.

களிற்றின் மீதமர்ந்து, செல்வச் செழுமையுடன் நகருடே வந்துகொண்டிருந்த பெருஞ்சித்திரனரை, நகர மக்கள் வியப்போடு கண்டு நின்றனர். 'யாவரோ ஒரு குறு நில மன்னர் போலும்?' எனக் கூறித், தமக்குள் உரையாடிக் கொண்டனர்.

யாரோ ஒருவர் தன்னைக் காண வருவதையும், அவருடைய ஊர்வலத்தின் வனப்பையும், ஏவலர் கூறக் கேட்ட இளவெளிமான், அத்தகையோரைத் தன் திருக்கோயிலின் வாயிலிலேயே வரவேற்கும் கருத்துடனே வந்து நின்ருன்.

அவனுடைய காவன் மரம் அவன் அரண்மனைக்கு முன்னர் விளங்கிற்று. காவன்மரம் என்பது இந்நாள் விளங்கும் கொடிமரத்தைப் போன்று போற்றப் பெறுவ தொன்று ஆகும். அதனை வீழ்த்தின், அல்லது அதற்கொரு ஊறு செய்யின், அது அந்த மன்னனையே மறுத்ததாகும் என்று கருதப்பட்டு வந்தது. அதனைக் கண்ணும் கருத்து மாகக் காவலர் பேணி வந்தனர். அதனைக் காப்பதற்குத் தம் உயிரையும் பொருட்டாக்காது போரிடும் இயல்புடையவர், அந்நாளைய மன்னர்கள் அனைவரும்.

வரவேற்க வந்து நின்றிருந்த மன்னனின் முகம், வந்து இறங்கிய பெருஞ்சித்திரனாரைக் கண்டதும் பெரிதும் வெட் கத்தாற் சிவந்தது. அவரோ, களிற்றினின்றும் இறங்கி, நேரே காவன் மரத்தருகே சென்று, அதனை அதன்பாற் பிணித்துவிட்டு, இளவெளிமானிடம் வந்தனர். அவருடைய செயலால் வெட்கமும் சினமும் எழுகின்ற அவன்முன், நிமிர்ந்து நின்ற புலவரைக் கண்ட பலரும், 'அடுத்து என்ன நிகழுமோ எனக் கவலையுற்றுக், கை பிசைந்தவாறே நின்றனர்.

'மன்னு! இரவலர்களைப் புரந்து போற்றும் தன்மை யுடைய புரவலன் நீயும் அன்று. ஆனல், இரவலர்களுக்கு வழங்கிப் போற்றும் புரவலர்கள் இந்நாட்டகத்து இல்லா தும் போய்விடவில்லை! 'இரவலன்' என்று, அன்று இகழ்ந் தனையே! இரவலனின் உண்மையான பெருமையையும் இப் போது காண்பாயாக! இரவலர்களுக்கு ஈவோரின் உண்மை யான ஈகைச் சிறப்பையும், இதோ என்பால் விளங்கும் பெரும் பொருளினுற் கண்டு உணர்வாயாக! நின் ஊர்க் காவல் மரம் வருந்தக், கொணர்ந்து, யான் கட்டியுள்ள

பெரிய நல்ல களிறு நினக்கு யான் தரும் பரிசில். அதனை ஏற்றுக் கொள்வாயாக. யான் சென்று வருகின்றேன்" எனக் கூறினர்.

இளவெளிமானின் உள்ளம் பலவாறு எண்ணிச் சுழன்றது. தன்னுடைய செயலுக்குப் பழி தீர்த்துக் கொண்ட புலவரின் தன்மைக்கு முன், அவன் செய்வதறியாது திகைப்புற்று நின்றான். அவரை அவன் எளிதாகக் கொன்றுவிட முடியும். ஆனல், அவரை முதற்கண் போற்றாது இகழ்ந்ததற்கே தனக்கு அப் பழியானல் அவரைக் கொன்றால், அதனல் வரும் பழியின் அளவு, அவனைப் பெரிதும் நடுங்கச் செய்தது. தான் செய்த தவறு அவனுக்கு புலனாகவும் தொடங்கியது.

"என்னை மன்னித்து விடுங்கள் பெருமானே! யான் இளையோன்! ஆதலின், அறியாமையால் தங்கள் பெருமை அறியாது நடந்து கொண்டேன்" எனத், தலை கவிழ்ந்து நின்றான்.

புலவரும், அவனுடைய மனமாற்றத்தினை அறிந்ததும் அவன்மீது கொண்டிருந்த தம் பகைமையை மறந்தார்; அவனுடைய தெளிந்த உள்ளத்தை வாழ்த்தினர்.

அவன் அளித்த பரிசில்களுடன், மீண்டும் தம் நாடு நோக்கிச் சென்றார். வறுமையிலும், தம்முடைய சிறப்பைக் காத்தற்கு, இவ்வாறு அறப்போர் ஆற்றிய புலவர் பெருஞ்சித்திரனரின் பெருமையை, நாமும் போற்ற வேண்டும்.

# 7. பகை தீர்த்த பண்பாளர்

தமிழ்ச் சான்றோராகிய பெருஞ்சித்திரனார், தம்மை மதியாது இகழ்ந்த இளவெளிமானுக்கு அறிவு கொளுத்திய செய்தியைக் கண்டோம். அவருடைய, மற்றொரு செயலினைப்பற்றியும் இந்தப் பகுதியினுள்ளே நாம் காண்போம்.

முதிரமலைக்குத் தலைவனாகிய குமணவள்ளல், பரிசிலாகப் பெருநிதி அளித்துப் பெருஞ்சித்திரனாரைப் போற்றினான். அவன் அளித்த செல்வமிகுதியைக் கொண்டு, அவர், தம் வறுமையை ஒழித்து, வளமான வாழ்வுப் பாதையிலே செல்லத் தொடங்கியிருக்கலாம்.

வறுமைத் துன்பத்தை அவரும் அவர் குடும்பத்தவரும் அறியாதவர்களும் அல்லர். ஆயினும், வளம் பெற்றதும், அதனைப் பேணிவைத்துக் காத்துப் பயன் கொள்ளும் தன்மை, அவர்களிடத்தே அமைந்து விளங்கவில்லை.

குமணன் அளித்த செல்வமோ அளவிடற்கும் அரியதாகத்தா னிருந்தது. எனினும், அவற்றை எல்லாம் மிக

விரைவிலேயே செலவுசெய்து விடுகின்ற பண்பு, பெருஞ் சித்திரனாரிடமும் பெரிதாகவே இருந்தது. செல்வத்துடன் சென்ற அவர், தம்முடைய காதல் மனையாளை அன்புடன் அழைத்தனர். "என் மனைக்கு உரியவளே! எம் மருங்கும் பழங்கள் தொங்கிக் கொண்டிருக்கும் வளமான முதிர மலைக்கு உரிமையுடைய குமணன் தந்த வளம் இவை அனைத்தும். இவற்றை நீயும் அனைவர்க்கும் வழங்கு வாயாக.

"நின்னை விரும்பி வந்து வாழ்பவர்களுக்கும், நீ விரும்பி வாழச் செய்திருப்பவர்களுக்கும், பலவாகிய மாண்பினை யுடைய கற்பின் சிறப்புடைய நின்னுடைய உறவினர் முதலியவர்களுக்கும், நமக்குப் பசித்துன்பம் வந்த காலத் துக், கடனாகத் தந்து உதவியோர்களுக்கும், இந்தப் பொருளைக் கொடுப்பாயாக.

"இன்னோர்க்குக் கொடுப்பதோ? இன்னோர்க்குக் கொடுக்க வேண்டாமோ? எனவெல்லாம் ஆராய்தலும் வேண்டாம். என்னோடு எதனையும் கேட்கவும் வேண்டாம். அதனைக் கொண்டு சிறப்பாக வாழ்வோம் என்று கருதிப் பூட்டி வைக்கவும் வேண்டாம். எல்லோர்க்கும் கொடுத்து அதனாலேயே மகிழ்வாயாக"

இவ்வாறு, தம் மனையோளிடம் கூறியவர் பெருஞ் சித்திரனார் எனில், அவர் செல்வத்தின்பால் கொண்டிருந்த பற்றினைப்பற்றி என் சொல்வது? அவருடைய மனைவியோ கற்பின் அருஞ்செல்வியார் ஆவர். அவரும், தம்முடைய அருமைக் கணவரின் கருத்துப்படியே குமணன் அளித்த செல்வத்தை வாரி வாரி வழங்கினார்.

சில காலம் கழிந்ததும், மீண்டும் அவர் வீட்டிலே வறுமை குடிகொள்ளத் தொடங்கிற்று. புலவரின் மனமும் வருத்தம் கொள்ளலாயிற்று. அடுப்பு, சமையலை மறந்து விட, அங்கே காளான் பூத்துக்கிடந்தது. பசியால் அனை வரும் வருந்தினர். அவர் மனைவிக்குப் போதிய உணவு இல்லாமையால், அவர் மிகவும் மெலிவுற்றவ ராயினர். அவர்கள் குழந்தை, தாயின் பாலற்ற மார்பைச் சுவைத்து, பால் காணுததால் அழுது கதறத் தொடங் கிற்று. அவ்வாறு அழுகின்ற தன் குழந்தையின் முகத்தினை நோக்கியதும், அந்தத் தாயின்உள்ளம் கொண்ட துயர த்தின் மிகுதியோ அளவிடமுடியாததாயிருந்தது. கண்கள் நீர் நிறைந்தன. அந்தக் காட்சியைக் கண்ட பெருஞ் சித்திரனரின் உள்ளமும் பெரிதும் வருத்தம் அடையத் தொடங்கிற்று. மீண்டும், பரிசிலை நாடி அவர் புறப்பட்டார்.

அந்த நிலையிலே, தமக்கு இல்லை என்னுது உதவுபவன் குமணவள்ளலே என்று கருதிய புலவர், அவன் நாட்டினை நோக்கிச் செல்லத் தொடங்கினர். காடும் நாடும் பலப்பல கடந்து, அவர், குமணனைக் காணச் சென்று கொண்டிருந் தார்.

குமணன், கொடை வளத்தால் சிறந்தவனுக் விளங்கிய தைப் போன்றே, குணநலத்தாலும் மிகமிக உயர்ந்த வனுகவே விளங்கினன். ஆனல், அவனுக்கு ஒரு தம்பி இருந்தான். இளங்குமணன் என்னும் அவன், அண்ண னுக்கு நேர் எதிரிடையானவன். 'அண்ணனை அழித்து விட்டுத் தானே நாட்டினைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும்' என, அவன் திட்டமிட்டான். அவனுடைய திட்டத்திற்கு உதவவும், துணையாகப் பலர் சேர்ந்தனர்.

அண்ணனை ஒழிப்பதற்கான தக்க சமயத்தை நாடியவனாக, அவன், மறைவாகப் பல சூழ்ச்சிச் செயல்களைச் செய்து கொண்டிருந்தான்.

தம்பியின் திட்டமும், அவன் செயல்களும், குமண னுக்குத் தெரியவந்தன. அவன் உள்ளம் பெரிதும் புண் பட்டது. நிலைமை, அவனுக்கு ஆதரவாக இல்லாததனையும் அவன் அறிந்தான். நாட்டினைத் தம்பியே ஆள்வதற்கு விட்டுவிட்டு, எவரும் அறியாதபடி, காட்டிற்குச் சென்று விட்டான்.

இளங் குமணன் செய்தியறிந்ததும் மகிழ்ந்தான். அரசை எளிதாகவே அடையமுடிந்ததில் அவனுக்குக் களிப்பு மிகுதியாயிற்று. எனினும், குமணன் உயிரோ டிருப்பது, தனக்கு என்றைக்கும் இடையூறு என்பதையும் உணர்ந்தான். குமணனின் தலையினைக் கொணர்பவருக்குப் பெரும்பரிசில் அளிப்பதாக, அறிவிப்புச் செய்தான். தம்பியின் அந்த அறிவிப்பினைக் காட்டிலேயிருந்த குமண னும் தன் அன்பர்கள்வழிக் கேட்டான். எனினும், அவனால் யாது செய்யமுடியும்? தன்னுடைய நிலைமைக்கு நொந்தவ னாக, அவன், காடே தனக்கு வாழ்விடமாகக் கருதி, அமைந்து விட்டான்.

அவனை நாடிச் சென்றுகொண்டிருந்த புலவர், அவன் நாட்டை அடைவதற்கு முன்பாகக், காட்டிலேயே அவனைக் கண்டுவிட்டனர். 'அவன்,வேட்டைமேற்கொண்டு வந்திருக் கலாம்'' எனக், கருதினர் புலவர். தம்முடைய நிலையினை அவனிடம் கூறித், தமக்கு உதவுமாறும் வேண்டினர்.

குமணனின் உள்ளம், புலவருக்கு வழங்க முடியாத தன் நிலையினை எண்ணித் துன்புற்றது. அப்போது, தன் தம்பியின் அறிவிப்பு அவன் கண் எதிரே தோன்றவே, அவன் பெருமகிழ்வு கொண்டான்.

தன் உடைவாளினை எடுத்துப் புலவரிடம் தந்தான்.

"புலவர் பெருமானே! என் தலையினைக்கொய்துகொண்டு சென்று, இளங் குமணனிடம் தாருங்கள். அவன் தங்கட்கு ஏராளமான செல்வங்களை அளிப்பான். அதனைக் கொண்டு தங்களின் வறுமையைப் போக்கிக் கொள்ளுங்கள்" என்றான்.

பெருஞ் சித்திரனார் திடுக்கிட்டார். அவரால், அவனுடைய செயலை எப்படிப் போற்றுவதென்றே தெரியவில்லை. 'பெருமானே! என்னே தங்கள் செயல்?' என்று தான், அவரால் சொல்வதற்கு இயன்றது.

'மிக்க வறுமையுடைய நீவிர், ஏதும் பெறாது வீணே செல்லுதல், நான் என்னுடைய நாடு இழந்ததனைவிட, எனக்கு மிகவும் துன்பந்தருவதாகும். என்னைத் தருவதினும் சிறந்த எதனையும் தருகின்ற நிலையிலே யானும் இல்லை. என் தம்பியோ என் தலைக்கு உறுதியாகப் பெரும் பொருள் தருவான்" எனத், தன் முடிவை விளக்கினான் குமணன்.

'வேண்டா! ஆயின், யான் வரும்வரை தங்கள் தலையினை வேறு எவர்க்கும் அளித்துவிடுதல் கூடாது. அது எனக்கே உரிமையானது' என்று கூறிவிட்டு, புலவர் இளங் குமணனைக் காண்பதற்குப் புறப்பட்டார்.

அவர் உள்ளம் குமணனின் செயலினால் பெரிதும் புண் படவும் செய்தது. 'இத்துணை வள்ளன்மை உடையான்

ஒருவனுக்கோ, இந்த நிலைமை?' அவர் அதனை எண்ணி எண்ணி வருந்தினர்.

அந்த வறுமையிலும், அவருடைய உள்ளத்துச் செம்மை, அவரைத் தீயன செய்தற்கு இசைவிக்கவில்லை. அவரும் குமணனின் கருத்தைப் போலவே செய்திருக்கலாம். ஆனல், அருள் உள்ளம் கொண்ட புலவர் அங்ஙனம் செய்ய நினைப்பாரோ? அவர், 'எங்ஙனமும் இளங் குமணனைக் கண்டு, அறத்தின் தன்மையை எடுத்துக்கூறி, அவனைத் தெளிவுபடுத்துதல் வேண்டும்' என்றே கருதினர்.

முதிரமலை நாட்டை அடைந்ததும், இளங் குமணனின் அரண்மனையை நோக்கி ஆர்வமுடன் அவர் சென்றர். அங்கே, அவனுடைய அவை நடந்து கொண்டிருந்தது. அதன்கண் இருந்து, அவன் மிகவும் கடுமையாக எந்தச் செய்தியையோ பற்றி ஆராய்ந்து கொண்டிருந்தான். புலவர் அதனைக் கவனிக்கலானர்.

'ஏவலை ஏற்றுச் சென்றவர்கள் அனைவரும் திரும்பி விட்டனர், பெருமானே! எங்கும் குமணனைக் காணவில்லை. அவர் ஒருக்கால் இறந்தே போயிருக்கலாம்' என்றனன் ஒருவன்.

'நீங்கள் அனைவரும் திறனற்றவர்கள். முதலிலேயே நம் சூழ்ச்சியை அவன் அறிந்து கொள்ளவும், நம்மை விட்டுத் தப்பிச் செல்லவும் விட்டுவிட்டீர்கள். இப்போது, அவனைக் கண்டுபிடிக்கவும் உங்களால் இயலவில்லை." என்று, அவனைக் கடிந்துகொண்டிருந்தான், இளங்குமணன்.

'அரசே! காடும் மலையும் நாடும் எங்கும் சென்று நம் ஏவலர் தேடிவிட்டனர். குமணனைக் காணவே இல்லை,

குமணன் பெயரையே எங்கும் கேட்டிலோம். ஒன்று, அவர் இறந்திருக்க வேண்டும்; அல்லது, பிறநாடுகளுக்குச் சென்றிருக்க வேண்டும்" என்றான் அவன்.

"அதனைத்தான் நானும் தெளிவுபடுத்த விரும்புகிறேன். வேற்று நாடு சென்று, வேற்றூர் துணையுடனே, அவன் முதிரத்தைத் தாக்கவும் முயலலாம் அல்லவோ? அவனுக்கு நண்பர்கள் மிகுதியாக இருப்பதனால், எவராயினும் உதவவும் முன்வரலாமே? அத்தகைய நிலைமை ஏற்படாதிருக்க வேண்டுமாயின் அவனை உடனே நாம் அழித்தாக வேண்டும். அவன் தலைக்கு ஐயாயிரம் பொன் என்றிருந்த அறிவிப்பினைப் பதினாயிரமாக மாற்றிவிடுங்கள்" என்றான், இளங்குமணன்.

அவ் வேளையிலேதான் பெருஞ் சித்திரனார் அவைக்கண் வந்தார். இளங் குமணனின் முன்னர் வந்து, 'வாழ்க மன்னவா? வாழ்க நின் வன்மை!' என, வாழ்த்தினார்.

பெருஞ் சித்திரனாரை இளங்குமணன் மிகவும் நன்றாக அறிவான். முன்னர் அவர் வந்ததும், பரிசில் பெற்றுச் சென்றதும், அவன் அறிந்தவைதாம். எனவே, "அமர்க புலவரே! அமர்க" என வரவேற்று, அமரச் செய்தான்.

"பெருஞ்சித்திரனார் குமணனின்பால் பெரிதும் நன்றி உடையவராயிருப்பார். எனவே, தன்னுடைய ஆராய்வை அவரெதிரே நடத்துதல் வேண்டாம்" எனக் கருதிய அவன், தன்னுடைய ஏவலர்களுள், குமணனைத் தேடுவதற்காகப் பொறுப்பு ஏற்றவர்களை வெளியே அனுப்பிவிட்டுப் புலவரை நோக்கினான்.

புலவரும், நடப்பதை அறிந்து வருந்தாமல் இல்லை. அவருடைய உள்ளத்துள் நிரம்பியிருந்த வேதனையை அவர் முகமே தெளிவாகக் காட்டிற்று. குமணனின் பெருந் தன்மையும், முன்னர்த் தாம் அவனைக் காண வந்திருந்த காலத்திலே அவன் செய்த சிறப்பும், அவர் உள்ளத்துள் நிறைவுற்றிருந்தன. அந்நாளிலே, குமணவள்ளல் கொலு வீற்றிருந்த அரியணையிலே அவன் தம்பி வீற்றிருப்பதும், அவன் தன் தமையனைக் கொன்று ஒழிப்பதற்கே முனைந்து கொண்டிருப்பதும் காண, அவர் கொண்ட வேதனைப் பெருக்கம் கொஞ்சநஞ்சமன்று.

புலவர், சிந்தனையிலே மூழ்கி இருப்பதனைக் கண்ட இளங்குமணன், "புலவரே! சிந்தனையிலே மூழ்கிவிட்டீர்கள் போலும்?" என்றான்.

'இல்லை மன்னா! சில செய்திகளை நினைத்துக் கொண் டேன். மனம் ஒருநிலைப்படாது சுழலத் தொடங்கிற்று.' என்றனர் புலவர்.

'தாங்கள் முன்னர் வந்திருந்த நிலைபற்றியதுதானே? இருக்கலாம். குமணன் இப்போது இங்கு இல்லை. எங்கோ சென்று ஒளிந்து கொண்டுள்ளனன். அவன் என்னிட மிருந்து தப்பிவிடுவானும் அல்லன். எனினும், தாங்கள் வந்த காரியம் யாதோ?' என்றான் மன்னன்.

'மன்னவா! யான், குமணன் இங்கே இல்லாததனை அறிந்து திகைப்புற்றிருப்பேன்' என, நீ கருதுகின்றாய் போலும்; அது தவறு. யான், நேராகக் குமண வள்ள

விடமிருந்துதான் இப்போது வந்துகொண்டிருக்கிறேன்' என்றார் புலவர்.

"எங்கே குமணன்? எவ்விடத்தே உள்ளனன்? தங்கள் வரவிற்குக் காரணம்?' என, இளங்குமணன் ஆத்திரத்துடன் கேட்டான்.

'மன்னா! இந்த உலகத்திலே என்றும் நிலைபெறுதல் வேண்டும் என்ற குறிக்கோள் உடையவர்கள் சிலர். அவர்கள், தம்முடைய புகழை இங்கே நிலைபெறுத்தி விட்டுத் தாம் மாய்ந்து போயினர். சிலர், அளவிடற்கரிய பெருஞ்செல்வம் பெற்றிருந்தும், வறுமை காரணமாக, வந்து இரந்தவர்களுக்குக் கொடுத்து உதவாததனால், பழைமையான, கொடைக்குரிய இரவன்மாக்களின் தொடர்புகளை அறியாமலும் உள்ளனர். கால்களிலே தொங்கும் ஒலிமிக்க மணிகள் ஒலித்துக் கொண்டிருக்கும், முகத்திற் புள்ளிகளையும் அசைந்துவரும் தன்மையினையும் உடைய களிற்றியானைகளையே தன்னைப் பாடி வருபவர்களுக்கு இல்லையென்னாது குறைவின்றிக் கொடுக்கும் கேடற்ற நற்புகழினை உடையவன்; வலிமிக்க சிங்கவேறு போன்ற தலைவன்; நின் அண்ணன். அவனைக் காட்டகத்தே கண்டு, யானும் பாடி நின்றேன்.

'வறுமையுற்று வந்து, பரிசில் பெறுகின்ற ஒரு பரிசிலன் ஏதும் பெறுக வீணே பெயர்தல், என்னுடைய நாட்டினை இழந்ததனைக் காட்டினும் மிகவும் இன்னாததாகும்' என்றான் அவன்.

அது மட்டுமோ? தன் வாளினை உருவியும் என்னிடத்திலே தந்தனன். தன் தலையினை எனக்குத் தந்து விடு

வதற்கே அவ்வாறு செய்தனன். தன்னினும் சிறந்தது வேறு உலகில் எதுவும் ஒன்று இன்மையால்தான் அங்ஙனம் தந்தனன் போலும்! அந்தப் பெரு மகிழ்வுடனே, நின்னுடைய அண்ணனைக் கண்டவனாக, யானும் வந்துகொண்டிருக்கின்றேன். அவன் தந்த வாளும் இதோ வைத்துள்ளேன்.''

பெருஞ்சித்திரனார், இவ்வாறு கூறிக் குமணன் தமக்குக் கொடுத்த வாளினை எடுத்துத் தந்ததும் அந்த அவையே அதிர்ச்சியுற்றது. இளங்குமணனின் உள்ளமும் அந்நிலையிலே துணுக்குற்றது. அவன் செயலற்று நின்றான்.

'அரசே! குமண வள்ளல் தன் தலையைக் கொய்து நின்பால் கொடுத்து, அதற்கு நீ தரும் பரிசிலைப் பெற்றுச் சென்று, என் வறுமையைப் போக்கிக் கொள்ளுவதற்குக் கொடுத்த வாள் இதோ இருக்கிறது. இனி, யான் என்ன செய்வது? அவன் தலையினைக் கொய்து வருவதோ?' என்றார் புலவர்.

இளங்குமணனின் சினமும், சூழ்ச்சி நினைவும் எங்கோ மறைந்தன. நாடிழந்து, காடே வாழிடமாக இருந்தும், தலையினைக் கொய்துவருவார்க்குப் பரிசுதருவதாகத் தான் அறிவித்த செய்தியினை அறிந்து, அதனைப் புலவரின் வறுமையைப் போக்குதற்குத், தானே தருதற்கு முன்வந்த குமணனின் செயல், அவனைப் புதிய மனிதனாகவே ஆக்கி விட்டது. அவன் மனத்திரையிலே குமணனின் அருள் பொலியும் திருமுகம் தோன்றிற்று. அவனுடைய உயரிய பண்பும், தன்னுடைய கீழ்மையான செயலும் நிழலாடின.

'பெருமானே! நான் தவறு செய்துவிட்டேன். என்னைப் பொறுத்து அருளுங்கள். அவரை நீங்கள் கொல்லுதல்

வேண்டாம். என் பழிச்செயலை மறந்துவிடுங்கள். அவனுடைய நாடு மீண்டும் அவனுடையதே யாகும்' என்றனன்.

அவனுடைய மனமாற்றம் புலவர்க்கு மிகவும் மகிழ்வைத் தந்தது. தாம் தொடுத்த அறப்போர் வெற்றிபெற்றதனை நினைந்து அவர் நிமிர்ந்து இருந்தனர். அவர் கண்கள் வியப்பினால் ஒளிமிகுந்தன.

'மன்னா! நீ குறித்தபடி எனக்குப் பொன்னும் பொருளும் தருதல் வேண்டாம். ஆனால், நின் அண்ணனின் உள்ளம் துன்புறும்படியாக மட்டும் செய்துவிடாதே" என்றனர்.

'இல்லை, புலவர் பெருமானே! அவனுக்குரிய நாட்டினை அவனுக்கே தந்து விடுகின்றேன். அவனிடம் மன்னிப்புப் பெறுவதே என் முதல் வேலை" என்றான் அவன்.

புலவரும் உள்ளம் மகிழ்ந்தார். தம்முடைய அறப்போர் அவ்வாறு முடியும் என, அவரே எதிர்பார்த்து வரவில்லை. எனினும், அந்த முடிவு அவருக்கு ஒரு சிறந்த நிலையையும், இன்பத்தையும் தந்தது.

பொறாமையாற் புழுங்கி, உடன் பிறந்த அண்ணனுக்கே ஊறுசெய்ய நினைத்தவன் இளங்குமணன். தன் அண்ணனின் அருட்பெருக்கைப் புலவர் வாய்மொழியாற் கேட்கவும், அவன் உள்ளமும் கரைந்து உருகிற்று. அவன்பால் உடன்பிறப்பின் அன்புப் பிணிப்பு மீண்டும் முகிழ்த்து மலர்ந்தது. அவன் சினம் செத்தது; அடங்கிக் கிடந்த செம்மையும் அறமும் அவன்பால் கிளர்ந்து எழுந்தன.

பெருமானே! யான் கொடியவன். பெறற்கரிய பெருந் தகையோன் ஒருவனைப், புகழாளனை போற்றுதற்குரிய என் முன்னோனை, அழிக்க முயன்றேனே? அவனைக் கொல் விக்கத் துணிந்த என் அறியாமையினை எங்ஙனம் போக்கு வேன்? அதற்கு ஒரு கழுவாயும் உளதோ?" எனக் கலங்

பெருஞ்சித்திரனார் கொண்ட அன்பும் கரை புரண்டு பெருகிற்று. தம்பியை அழைத்துச் சென்று குமணவள்ளலிடம் சேர்த்தார். இருவரும் ஒன்றுபட்ட அந்த இனிய காட்சியைக் கண்டு களித்தார். அவர் மறந் திருந்த வறுமையினைக், குமணனே நினைப்பூட்டி, அவரை மீண்டும் செல்வச் செழுமையாளராக ஆக்கினான். அவரும். செயற்கு அரிய செய்த சிந்தை நிறைவோடு, ஊர் திரும்பினார்.

# 8. மாவினை அழித்த மாவீரர்

அந்த நாளிலே, நம் தமிழகத்திற் பல்வேறு இனத்தைச் சார்ந்தவர்களும் கூடி வாழ்ந்து வந்தனர். அவர்கள், தத்தம் நாட்டின் பெயராலும், தாந்தாம் வாழ்ந்துவந்த நிலப்பகுதிகளின் பெயராலும் அழைக்கப்பட்டனர். குறவர், எயினர், பொறையர் போன்றோர் மலைப்பகுதிகளிலே வாழ்ந்து வந்தோர் ஆவர். ஆயர், காடும் காடுசார்ந்த நிலமுமாகிய முல்லைப் பகுதிகளிலே வாழ்வமைத்து வாழ்ந்திருந்தோர் ஆவர். ஊரன், உழவன் போன்றோர் மருதநிலத்து வாழ்வு பெற்றிருந்தோர். உமையர், உமணர், பரதவர், மீனவர் போன்றோர், கடலும் கடல் சார்ந்த நாடுமே தம் வாழ்விற்குரியவாகக் கொண்டிருந்தோர்.

நாஞ்சில், தென் பாண்டி, குட்டம், கற்கா, பூழி, மலையமானாடு, கொங்கு, குடகம், சோணாடு, தொண்டை நாடு, ஓய்மானாடு, மேற்கா நாடு, பறம்பு நாடு இன்ன பிற நாடுகளை ஒட்டியும் மக்கள் குறிக்கப்பெற்றுள்ளனர் எனவும் நாம் காணலாம். அன்றியும், தொழிலாற் பகுக்கப்பட்டிருந்தோரும் பலராக விளங்கி வந்தனர். இவர்களன்றியும்,

அதியர், மழவர், கொங்கர், கோசர், வேளிர், யவனர், வடுகர் போன்ற பல இனத்தவர்களும் பழந்தமிழகத்தின் வாழ்விற் பங்கு கொண்டு இருந்தனர். இத்தகைய பல்வேறு இனத்தவர்களுள், 'கோசர்கள்' என்பாரும் ஒருவகையினர் ஆவர்.

இந்தக் கோசர்கள் மறக்குணத்தினலே மாண்புற்ருேராகவும் விளங்கினர். அதனுல், இவர்கள், போரே தம் தொழிலாக அமைந்தவராகப், பற்பல பகுதிக்கண்ணும் வீற்றிருந்த மன்னர்களிடத்தே பணியாற்றியும், தாமே தனித்த வாழ்வு நடாத்தியும் வந்தவர் ஆவர். இவர்கள் தமிழினத்தாரே எனவும், காசுமீரப் பகுதியினின்றும் வந்தவர் எனவும், கோசாம்பியினின்றும் தென்னகம் போந்தவர் எனவும், ஆராய்ச்சியாளர்கள் பலவாருகக் கூறுவார்கள். யவனர்களைப் போன்று, இவர்களும் மத்திய தரைக் கடற்பகுதி நாடுகளினின்றும் வந்தோராயிருக்கலாம் என்பவர்களும் உள்ளனர். இவர்களுடைய ஆதிவரலாறுகள் எவ்வாருயினும், தமிழ் இலக்கியங்கள் இவர்களைப் பற்றிக் கூறுவன கொண்டு, அந்தக் காலத்துத் தமிழக அரசியல் வரலாற்றிலே, இக்கோசர்களின் பங்கும் ஒருவாறு குறிப்பிடத் தக்கதாயிருந்தது என்று, நாம் கருதலாம்.

இவர்களைக் குறிக்கும் இலக்கியப்பகுதிகள் யாவும் இவர்களுடைய வாய்மொழி தவருத இயல்பினைப் பற்றியும், நட்பினைப் போற்றும் நல்லதோர் பண்பினைக் குறித்தும், நயம்படப் போற்றி உரைக்கின்றன.

மேலைக் கடற்கரைப் பகுதிகளிலும், தமிழகத்தின் பற்பல பகுதிகளிலும், இவர்கள் செய்த அருஞ்செயல்களை

அகநானூறு, புறநானூறு போன்ற சங்க நூல்கள் நமக்கு எடுத்து நுவல்கின்றன. அவைகளை நாம் ஊன்றி நோக்கும் போது, "மறக்குல மாண்புகள் மிகுதியாகப் பொருந்தி யிருந்த ஒரு மாபெரும் இனத்தவராக, இவர்கள் அந்நாளிலே விளங்கிவந்திருக்க வேண்டும்" என்று அறிகின்றோம்.

அந்த நாளிலே, கொண்கான நாட்டினை ஆண்டுவந்தான் ஒரு குறுநில மன்னன். அவன் பெயர் நன்னன் என்பதாகும். கொண்கான நாடு என்பது, இந்நாளைய செங்கற்பட்டு வட்டத்துச் சில பகுதிகளும், வடவாற்காடு மாவட்டத்துப் பகுதிகள் சிலவும் கொண்ட ஒரு சிறு நிலப்பகுதியாகும். அதன்கண், அரசு வீற்றிருந்தோனாகிய நன்னன், மிக்க ஆற்றல் உடையோனாகவும், போர்க்களம் பல கண்டு வெற்றிமிடுக்குடன் திகழ்ந்தோனாகவும், புகழ் மிகுந்தோ னாகவும் விளங்கினான். அவனுக்கு உரியதாயிருந்த பாழிநகர் மிக்க புகழுடையதாகத் திகழ்ந்தது. அதன்கண் இருந்த பாழிக் கோட்டை, பகைவர் அணுகுவதற்கும் அரிதான பல பாதுகாப்புக்களை உடையதாகவும் விளங்கிற்று.

அந்நாளிலே, எங்கும் போர்கள் அடிக்கடி நிகழ்ந்து கொண்டே இருந்தன. மக்கள், போர்க்குணம் உடையவராக விளங்கினராயினும், போரின்கண் தோற்றோர் கண்ட அழிவுகளும் மிகுதியாயிருந்தன. செல்வம் உடையோர், அதனைத் தக்கவாறு பேணிக் காப்பதிற் பெரிதும் கவலை உடையவராக வாழ்ந்தனர். பாழிநகரின் வலிமையும், அதன் கோட்டையின் சிறப்பும், அதனைக் காத்துவரும் நன்னனின் ஆற்றலும், வேளிர் குலத்தார் பலரின் உளங்களைக் கவர்ந்தன. பகைவர்க்கு உட்படாதவாறு, வேளிர்கள் பலர், தங்களுடைய அரிய செல்வங்களை எல்லாம் பாழியின்கண்

பாதுகாவலாக வைத்துக் கவலையற்றிருந்தனர். அத்தகைய பெரும் புகழ் கொண்டதாக, கொண்கான நன்னனின் பாழி நகரம் அந்நாளில் விளங்கிற்று.

நன்னன், தமிழறிந்த சான்றோர்களையும், பாடலும் ஆடலும் வல்ல பாணரையும் விறலியரையும் போற்றி வருகின்ற, கலையுள்ளம் கொண்டவனாகவும் திகழ்ந்தனன். எனினும், அவனிடமும் ஒரு குறை இருந்தது. அது, தன்னுடைய ஆணைக்கு மாறுபட்டோரை, மிகவும் கடுமையாக ஒறுத்தல் என்ற கொடுந்தன்மையாகும். அந்த நிலையிலே, நன்னன் இரக்கம் ஏதுமற்றவனாகவே, கொடியோனாகவே விளங்கினான்.

ஒரு சமயம், இவன் மிக்க கவனமுடன் போற்றி வந்த மாமரத்தின் காயையோ கனியையோ எவரும் உண்ணலாகாது; உண்போர் உயிரிழக்க நேரும் எனக், கடுமையாக ஆணை பிறப்பித்திருந்தான். அதுபோது, அந்த மாமரத்தின் காய் ஒன்று, எப்படியோ வீழ்ந்து, அருவி நீருடன் கலந்து, ஆற்றின்கண் மிதந்து வந்துகொண்டிருந்தது. அருவி நீராடுவதற்குச் சென்றிருந்த, பெருஞ் செல்வமுடையவனின் அருமைத் திருமகள் ஒருத்தி, தன்னுடைய இளமையும் மடமையும் தூண்ட, ஏதும் அறியாளாய், அதனை எடுத்து தின்றுவிட்டனள்.

மாவைக் காத்து நின்றோர், காயினைத் தின்ற காரிகை நல்லாளைக் கண்டனர். அவர்களின் சினம் மிகுந்தது. அவளை, இளம்பெண் என்றோ, இரங்குவதற்கு உரிய மடமை கொண்டவளென்றோ, அவர்கள் எண்ணினார் அல்லர். தம் அரசனின் ஆணையினை மீறிய, அந்தக் கொடிய

குற்றம் ஒன்றே அவர்களின் கண்முன் நின்றது. அவளைக் கைப்பற்றிய அவர்கள், தம் அரசன்பாற் கொண்டு சென்று நிறுத்தினர்.

'தம்முடைய அருமை மகளின் அறியாமையால், நேர்ந்த பெரும் பிழையினைப் பொறுத்து, அவளை விடுவிக்க வேண்டும்' என்று, அவளைப் பெற்றோர் வேண்டினர். 'தமக்கு இரக்கங் காட்டு மாறு' கண்ணீர் சோரக் கலங்கி நின்று கதறினர். நன்னனின் உள்ளமோ எதற்கும் சற்றும் இளக மறுத்தது. மாவினைக் குறித்துப் பிறந்த ஆணையின் படியே, அந் நங்கையின் அழகிய கழுத்தினை அறுத்து விடவேண்டுமென்றே அவன் முடிவுசெய்தான். அதனை நிறைவேற்றி விடுமாறும் ஆணையிட்டான்.

அரசனின் ஆணையைக்கேட்ட மக்கள் அனைவருமே நடு நடுங்கினர்; மந்திரச் சுற்றத்தினர் வாயடைத்துச் செய லவிந்தாராய் நின்றனர்; சான்றோர்கள் செய்யும் வகையறி யாது சிந்தைதளர்ந்து சோர்ந்தனர்; பெற்றோர்கள் கொண்ட பெருவருத்தமோ ஏட்டில் எழுதுவதற்கும், எண்ணிக் காண் பதற்கும் ஒண்ணாத அளவிற்குப் பொங்கிப் பெருகிற்று. அவர்கள், தம் அரிய செல்வம் அனைத்தையும் இழந்தேனும், தம்முடைய அருமைத் திருமகளை, குலத்திற்கு ஒரு கொழு கொம்பை, குமரிப் பருவத்துப் பூங்கொடியைக், காத்துவிட முயன்றனர். அவள் உருவினைப் போன்றே அதே எடை யுள்ள ஒரு தங்கப் படிமையும், எண்பத்தொரு இளங் களிறு களும் அவளுயிருக்கு ஈடாகத் தருவதாகச் சொல்லி, நன்னனிடம் மன்றாடினர். நன்னனோ, அதற்கும் இணங்க வில்லை. அவனுடைய, இரக்கமற்ற ஆணையே இறுதியில் நிறைவேறிற்று; அந்த இளஞ் செல்வியின் இன்னுயிரும் துடிக்கத் துடிக்கப் பறிக்கப்பெற்றது.

தமிழ்ச் சான்றோர், நன்னனின் அந்தப் பழிச்செயலைப் பார்முழுவதுமே பறைசாற்றித் தூற்றினர். 'பெண் கொலை புரிந்த நன்னன்' என்ற பழி, வன்மையுடன் வந்து, அவனைப் பற்றிக் கொண்டது. நன்னன் மாய்ந்த பின்னரும், அவன் வழிவந்த பிறரும்கூட அந்தப் பழியினுல் சுட்டிப் பழிக்கப் படுவாராயினர் எனில், அதனைத், தமிழ் உலகம், அறம் பிறழாத நல்லுலகம், எத்துணை உறுதியாக மறுத்தது என நாம் உணரலாம்.

நன்னனின், அந்தக் கொடுஞ்செயல் கண்டு குமுறினோர் நாட்டிற் பலராயினும், அவனுக்கு ஒரு பாடம் கற்பிக்கத் துடித்தவர் கோசர் குலத்தினரேயாவர். இது, அந் நங்கை கோசர் குலத்தினளாதலால் எனவும் கூறுவர். எங்ஙன மாயினும், 'பழி செய்தவன் பாராளும் வேந்தன்' என்று கருதாமலும், 'அவன் படைவலுவில் மிக்கவ னுயிற்றே!' என, அஞ்சி ஒதுங்காமலும், 'நமக்கேன் வீண் தொல்லை?' என வாளாவிராமலும் கொதித்து எழுந்தனர் கோசர்களுள் சிலர்.

அவர்களுடைய உள்ளக் கொதிப்பு நன்னனை நோக்கிச் சென்றதினும், அந்த மடக்கொடியின் உயிர்க்கொலைக்குக் காரணமாயிருந்த மாமரத்தின் மீதே முதற்கண் சென்றது. 'ஒரு மாமரத்தின் காய் ஒன்றைத் தின்றதற்கு, ஒரு இளம் பெண்ணின் உயிரைக் கொல்வதோ? அத்தகைய தீவினைக்குக் காரணமான அந்த மாமரம் இனியும் இருப்பதோ? அதனை விட்டு வைத்தால், அறியாமையால் அதன் காய்களை உண் பவர்களின் உயிர்கள் பல, இனியும் தொடர்ந்து பாழாகலாம் அல்லவோ? எனவே, அந்த மாமரத்தினையே வேரொடுங் களைந்துவிடுதல் வேண்டும் என, முடிவு செய்தார்கள்.

முடிவு, மிகவும் விரைவாகவே உருவாயிற்றெனினும், அதனை நிறைவேற்றுவதற்கு முயன்றபோது, பற்பல இடையூறுகள் எதிர்ப்பட்டன. எனவே, 'அந்த மரத்தினைத் தக்கதொரு சூழ்ச்சியால் அழிப்பதே நெறியாகும்' என்று கருதினர் அக்கோசர்கள்.

'சூழ்ச்சியை வகுப்பதுபற்றியே தொடர்ந்து ஆராய்ந்து கொண்டிருந்த அவர்களின் உள்ளத்தே, திடுமென ஒரு திட்டமும் பிறந்தது. அதனை அவர்கள் நிறைவேற்றவும் முடிவு செய்தனர். அதற்கான ஆட்களையும் மிகக் கவன மாகத் தெரிந்தெடுத்து, அவர்கட்கு வேண்டிய பயிற்சிகளை யும் அளிக்கத் தொடங்கினர்.

அந்நாளிலே, இன்று தென்னாற்காடு மாவட்டத்துக் கூடலூர் நகரம் மிக்க வளமுடையதாக, குறுநிலத் தலைவன் ஒருவனின் ஆட்சிக் கோநகராக விளங்கிற்று. அதன்கண் இருந்து அரசாண்ட மன்னர்வழியினருள், நாம் குறிப்பிடு கின்ற அந்த நன்னனின் காலத்திலே இருந்து அர சாண்டவன், அகுதை என்பவன்.

அகுதை, போர் ஆற்றலில் மிக்கவனாகப், புகழ்ப் பெருக்குடன், புலவர் போற்றும் பெருவாழ்வினனாகத் திகழ்ந்தான். 'எறிந்திலை முறிந்த கதுவாய் வேலின் மணை நாறு மார்பின் மறப்போர் அகுதை' எனக், குறிப்பிடும் புறநானூற்றுப் பாடல், இவன் போர்ப் புண்பட்ட, புகழ்சால் மறத்தகை மன்னனாக விளங்கினான் என்பதனை வலியுறுத்தும்.

கொண்கானத்து நன்னன் என்பானுக்கு வேண்டிய வனாக, வேள் ஆய் எயினன் என்பான் ஒருவன் இருந்தான்.

அவன், மிக்க அருளுள்ளமும், ஆற்றற் பெருக்கமும் உடையவன். நட்பின் செறிவை நன்கு போற்றுகின்ற நயனுடையவனாகவும், நாவலர் போற்றும் நற்புகழ் மிக்கோனாகவும் விளங்கினான். இவையன்றியும், அவன் பறவையினங்களின்பாற் பேரன்பு கொண்டோனாகவும், அவற்றைப் பேணிப் புரந்துவந்த பேருளானனாகவும் திகழ்ந்தான்.

ஒரு சமயம், மிஞிலி என்பான் ஒரு மாவீரன், நன்னனோடு பகை கொண்டானாக, அவனை அழித்து விடுதலை கருதிப் பெரும் படையுடன் வந்துவிடவே, நன்னன் திகைப்புற்றான். அவன் நண்பனான ஆய் எயினனோ, விரைந்து தன் படையணிகளுடன் நன்னனின் உதவிக்கு விரைந்தான். நன்னனோ தன்னுடைய கோட்டையுள்ளேயே அடைத்துக் கிடந்துவிட்டான். அதனால், அவனை முற்றியிருந்த மிஞிலியோடு ஆய் எயினன் தனித்தே போரிட்டு நிற்கவேண்டியதாயிற்று. நன்னனும் வெளிப்போந்து போரிற் கலந்துகொண்டிருந்தானாயின், ஆய் எயினனின் படை ஒருபுறமும், நன்னனின் படை மறுபுறமும் நின்று போரிட, மிஞிலியும் எளிதாகவே தோற்று அழிந்திருப்பான். ஆனால், நன்னன் அங்ஙனம் வெளிவராது போகவே, மிஞிலியின் போரணிகளின் பெருந்தாக்குதலுக்கும், ஆய் எயினனே தனித்து ஈடுகொடுத்து, எதிர்நிற்க வேண்டியதாயிற்று. முருகனைப் போன்ற ஆற்றலுடன், போர்க்களத்தே குருதி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுமாறு, ஆய் எயினன் கடும் போர் இயற்றினான். எனினும், இறுதியிலே களத்தில் அவனும் பட்டு வீழ்ந்தான். நட்பிற்காகப், போர்க்களத்தே அந்த உத்தமச் சான்றோன் ஆய் எயினனும் வீழ்ந்து பட்டனன். தன் பெரும்படை வெற்றி கண்டாலும்

கூடத், தன் இழப்பும் அளவின்றிப் பெரிதாயிருக்கவே, மிஞிலியும், அத்துடன் தன் எண்ணத்தைக் கைவிட்ட வனாகத் திரும்பினான். ஆய் எயினனின் உடலை வெயிற் படாதவாறு நிழல்செய்து காத்தன பறவையினம்.

ஆய் எயினன் வேளிர்வழி வந்தவன். அவனும், அவனோடு வந்த வேளிர் பெரும்படையும் பேரழிவுக்கு உட்படவே, அவன் நாட்டு வேண்மகளிர்கள் கொண்ட துயரமும் பெரிதாயிற்று. 'மிஞிலி, தம்மையும் கொடுமைக்கு உள்ளாக்குவானோ?' எனக் கலங்கிக் கதறினர் அவர்கள். நன்னனோ தன் நண்பனைச் சென்று காணவும் வெட்கினான். அவன் மகளிரின் துயர் களையச் செல்லும் பண்பினையும் இழந்து நின்றான்.

அந்தச் செய்தியைக் கேட்டான் அகுதை. அவன் உள்ளம் பெரிதும் கொதிப்புற்றது. நன்னனின் பண்பற்ற செயலும், ஆய் எயினனின் அரும்புகழ்ச் செயலும் அவனைப் பெரிதும் கவர்ந்தன. 'அவன், வேளிர் குலத்தவனாயிற்றே? தான் கோசர் குடியினனாயிற்றே?' எனவெல்லாம், அகுதை நினைத்தானில்லை. தன் ஆற்றல் மிக்க அரும்படையுடன் விரைந்து சென்று, வேண்மகளிரின் பூசலைக் களைந்து, அவர்களைக் காவல் மிகுந்த இடத்தே வைத்துக் காத்தும் நின்றான். இவனுடைய, இப் புகழ்க்குரிய பெருஞ்செயலை, அகநானூற்று எட்டாவது செய்யுள், ஏற்றமுடன் எடுத்துக் கூறுவதனை நாம் காணலாம்.

இத்தகைய பண்பு நலஞ்செறிந்த அகுதை, தன்னைப் பாடி வருவார்க்கு வழங்கி மகிழ்கின்ற, பெரும் புரவலனும் புகழுடையோனாகவும் விளங்கி

அவனைப் பாடிச் செல்வார்க்குக் களிறுகளையும், பிடியானை களையும், நல்ல பல அணிகலன்களுடனே நாளும் வழங்கி வந்த வள்ளன்மை உடையவனாகவும் திகழ்ந்தான்.

அகுதையும் தம் இனத்தான் ஆதலையும், முன்னம் ஒரு முறை நன்னன் செய்யத் தவறிய செயலைச்செய்து அவனை வெட்கச் செய்தவனாதலையும் அறிந்த கோசர்கள், தம் திட்டத்திற்கும் அவனையே கருவியாக்கிக் கொள்ளுதற்கு எண்ணினர். அகவன் மகளிர் சிலரை அவன்பால் விடுத்து, அவனைப் பாடி மகிழ்வித்து, யானைகளைப் பரிசிலாகப் பெற்றுவருமாறு தூண்டினர். அவர்களும், அகுதையின் நாண்மகிழ் இருக்கைக்கண் சென்று, அவனைப் பாடிப் போற்ற, அவனும், மகிழ்வுடன் அவர்கள் விரும்பிய பரிசிலை அளித்துப் போக விடுத்தனன். பிடியானைகளுடன் வந்த அந்த அகவன்மகளிரைக், கோசர்கள், அவற்றை நன்னனின் நறுமாவிற் கட்டி வைக்குமாறு ஏவினர். அவர்களும் கோசர்களுக்கு வேண்டியோராதலின், அங்ஙனமே செய்தனர். யானைகளின் அசைவும் மண் பறித்தலும் காரணமாக, அந்த மாமரமும் வீழ்ந்தது அதனைச் சிறு கொம்புங்கூட இல்லாதவாறு முற்றவும் அழித்துவிட்டனர் கோசர்கள்.

நறுங்காய் ஒன்றினைத் தின்றதற்காக நங்கை ஒருத்தியின் உயிரைப்போக்கிய நன்னன், அகவன் மகளிரின் செயலால் மரமே வேரோடும் வீழ்ந்து பாழ்பட்டுப்போன செய்தியினைக் கேட்டதும், மனக்குமுறல் உற்றனன். எனினும், தான் முதலிற்செய்த ஒரு பெண் கொலையினாலே தனக்கு வந்த பழியும் துயரமும் அவன் உள்ளத்தே நிலை

பெற்றிருந்தன. மீண்டும், அகவன் மகளிரைக் கொன்று, தன் பழியை மிகுதியாக்கிக் கொள்ளுதற்கு அவன் கருதினன் இல்லை. தனக்கு, மாமரத்தின் அழிவு பெரிய தொரு நாணுத்தருவதே எனினும், அதனை அவன் பொறுத்துக்கொள்வதே செய்யத்தக்கது என்று கருதினன். அதனால், அந்த அகவன்மகளிரை யாதும் செய்யாது அமைந்துவிட்டான்.

நன்னனின் நறுமா, நங்கையின் உயிரைக் குடிக்கக் காரணமாக இருந்த மரம், கோசர்களின் சூழ்ச்சித்திறனால் அழிவுற்றது. அந்தச் செய்தியைக் கேட்ட நாடெல்லாம் மகிழ்வுற்றது. அந்தச் செயலை முடித்த கோசரை நாவாரப் புகழ்ந்தனர் நற்றமிழ்ப் புலவர்கள்.

நன்னனின் கொடுமைக்கு அஞ்சாது, அவனுடைய அறமற்ற கொடுஞ்செயலுக்கு ஒருமுடிவு கண்டனர் கோசர். அவர்கள், தம் இனத்தாரான படைமறவர் பலருடன் சென்று, படை எடுத்துத் தாக்கி அழிக்க முயன்றிருக்க லாம். எனினும், அவ்வாறு துணியாமல், ஆனால், அதே வேளையில் அறங்காக்கும் அருந்துணிவும் கொண்டு, அவனுடைய செயலுக்கு அவனே நாணமுற்று வருந்தித் திருந்தச் செய்தனர். அவர்களின் பெயர்களை நாம் இன்னின்னார் என அறியோம். எனினும், அந்தச் செயற் கரிய செயலாம், அறப்போர் ஆற்றி அறநிலை காத்துநின்ற அவர்களின் அரிய ஆண்மை, என்றும் மங்காது நிலை பெறுவது ஆயிற்று.

# 9. வஞ்சினம் காத்தோன்

இதுகாறும், அறப்போர் ஆற்றிய அருந்தமிழ்ச் சான்றோர்களின் வரலாறுகளுள் சிலவற்றை நாம் அறிந்தோம். அவற்றுள், தவறு செய்தவர், பொதுவாக மன்னர்களே யாகவும், அவர்களை எதிர்த்து நின்றோர், புலவர்களும் உழவர்களும் போன்ற குடிமக்களேயாகவும் விளங்கினர். பொதுவாக, வலுவுடையோர், வலிமைச் செருக்கினாலே அறம் பிறழ்ந்த செயல்களிலே ஈடுபடுகின்ற காலத்து, அதனை எதிர்த்து, அறமொன்றே தம் துணையாகக் கொண்டு, வெற்றியும் உற்றவர் அவர்கள் அனைவரும். இந்தப் பகுதியிலே, அவர்களினும் வேறாகப், படைப் பெருக்கு உடையோர் ஒரு முதியவர்க்குச்செய்த கொடுமைக் காகச்சென்று, அவரை மறப்போராற்றி அழித்த ஒருவனின் வரலாற்றை நாம் காண்போம்.

"அவனியற்றியது 'மறப்போர்' ஆயிற்றே? அதனை யாங்ஙனம் அறப்போர் எனல் பொருந்தும்?" எனச், சிலர் வினவலாம். போர் நிகழ்த்திய முறை மறத்தொடு பட்ட

தாகவே இருந்தபோதினும், அதனை மேற்கொண்டதற்கான காரணம் அறத்தினைப் பேணுவதென்பதே. ஆதலின், அறத்தின் துணையோடு, அதனைப் பேணுதற்கான போராட்டத்தினையும், நாம் 'அறப்போர்' எனவே கொள்ளலாம்; அங்ஙனம் கொள்ளலே முறையுமாகும்.

முன் பகுதியிலே, தமிழகத்தின் சில பகுதிகளிலே மறப்பண்பு உடையவராக விளங்கிய கோசர் இனத்தவர் பற்றிய சில செய்திகளை நாம் கண்டோம். இந்தப் பகுதியிலே, அவர்களின் தொடர்பான, மேலும் சில செய்திகளை அறிந்து கொள்வோம்.

படைப் பயிற்சியில் மிக்காராக விளங்கிய இக் கோசர் இனத்தவர், அந் நாளைய மன்னர்களின் படையணிகள் பலவற்றினும் கலந்துகொண்டு, போர்ப்பணியாற்றி வந்தனர். வெற்றிபெற்ற மன்னர்கள் அளிக்கும் பரிசில்களும் பொருள்களும் கொண்டு அவர்கள் வாழ்ந்து வந்தனர். போர்ப்பயிற்சியிற் சிறந்தவராக இவர்கள் விளங்கியதன் காரணமாக, முடியுடை மூவேந்தரும், குறுநிலத் தலைவரும் தம் படை எழுச்சிகளின்போது, கோசர்களின் துணையினை நாடுவாராயினர். இதனால், கோசர்கள், பெரும்பாலும், போரே தம் தொழிலாகப் பேணியவராக, நாடோடி வாழ்வினராக வாழ்ந்துவந்தனர்.

வடபுலத்தே, மோரியப் பெருவேந்தன் அசோகன் இந்திய மாநிலத்தின் பெரும்பகுதியினையும் கைப்பற்றிப், பேரரசனாக விளங்கிய அந்த நாளினும், உரிமை உடையவராக, மோரியப் பேரரசாலும் வெற்றி கொள்வதற்கு இயலாத வலுவுடையவராக, விளங்கியவர்கள் தமிழ் வேந்தர்களாவர். அவர்கள் மூவருடன், சத்திய புத்திரர்கள்

என்பாரும் சேர்த்துக் குறிக்கப்பெறுவர். இந்தச் சத்திய புத்திரர்கள், மேலைக் கடற்கரை யோரத்துச் சேர நாட்டிற்கு வடபகுதியின்கண் இருந்து ஆண்டு வந்தனர். இவர்களே கோசர்கள் என்பார்கள் ஆராய்ச்சியாளர்கள்.

அத்தகைய வலுவுடைய கோசர்கள், மேலைக் கடற்கரைப் பகுதியினின்றும், தமிழகத்திற்குள்ளும் புகுந்தனர். தமிழகத்தின் பற்பல பகுதிகளினும் வாழ்வு நடாத்தி வரவும் தொடங்கினர். அவர்களுடைய வாழ்வியல், நாம் முன்னர் கண்டது போன்று படைமறவர் பணியாகவே விளங்கிற்று. எனினும், ஒரு சில இடங்களிலே, அவர்கள் காடுகெடுத்து நாடுஆக்கி, உழுதுாண் வாழ்வினை மேற்கொள்ளவும் செய்தனர். உழவுச் செயல்களைப், பெரும்பாலும், தம் இனத்து முதியரும், போர்ப் பணியினின்றும் ஓய்வு பெற்றவருமாகிய, முது கோசர்களைக் கவனித்து வருவதற்கு ஏற்பாடு செய்தவராக, அவர்கள், தம் ஆண்மைச் செயலினையும் விடாது போற்றி வாழ்ந்தனர்.

போர்வெற்றி தேடித்தர, அதன்மூலம் அவர்களுக்குக் கிடைத்த நிலப்பகுதிகளை, அவர்கள் உழுது பயிரிடத் தொடங்கினர் எனவும் நாம் கொள்ளலாம். அவ்வாறு, அவர்கள், உழவுவாழ்வினை மேற்கொண்டனர் எனினும், உழவர்க்கே இயல்பான பொறுமையும், பிற நற்குணங்களும் அவர்கள்பாற் பதிவுபெறுதே போயின.குன்றுத மறத்துடனேயே அவர்கள் அதன் பின்னரும் விளங்கினர்.

காட்டினை அழித்து உழுது பண்படுத்திய கோசர்கள் ஓரிடத்தே பயறு விதைத்திருந்தனர். பயற்றுப் பயிறும் மிகவும் வளமாகப் பசுமையுடன் விளங்கிற்று. 'விரை

விலே, அதனின்றும் நிறைந்த பயனைப் பெறலாம்' என்று ஆர்வத்துடன் இருந்தனர், அக் கோசர்கள்.

பயற்றங் காடுகளோ காட்டை அடுத்து இருந்தன; எனவே, அவற்றைக் காத்துப் பேணிவருதல் முதன்மை யாகும் என, எண்ணினர் அக் கோசர்கள். அதனுல், நாற் புறமும் அதனைச்சூழ வேலியிட்டும் வைத்தனர்.

'வேலியிட்டு வைத்தாலும், வேலியைக் கடந்தும் ஆடு மாடுகள் உட்புகுந்து அழிவு செய்தல் நேர்ந்துவிடக் கூடுமே' என்று அச்சங்கொண்ட அவர்கள், அந்தக் காட்டினைப் பொறுப்புடன் காத்து வருதற்கும் சிற்சில காவலர்களை நியமித்தனர்.

காவலர்களும், இரவும் பகலும் எனப் பாராது, பயற்றங் காடுகளை மிகவும் விழிப்போடு பேணிக் காத்துவந்தனர். ஆடுகளோ மாடுகளோ அதனருகிற்கூடப் போய்விடாத வாறு மிகக் கடுமையாகவே காவல் செய்தனர். எனினும், அவர்களுடைய காவலையும் கடந்து, ஒருநாள், சில பசுக்கள் பயற்றங் காட்டினுள்ளே எங்ஙனமோ புகுந்துவிட்டன; அதனுல், ஏற்பட்ட அழிவும் பெரிதாயிருந்தது.

எங்கோ சென்றிருந்தனர் அக் காவலர்கள். அவர்கள் தம்முடைய காவலிலே கொண்டிருந்த நம்பிக்கையும் பெரிதாயிருந்தது. "கோசர்களின் பயற்றங்காடு மிக்க காவலை உடையது; அதனருகே செல்வதுகூட நமக்கும் நம்முடைய கன்று காலிகளுக்கும் இடையூறு தருவதாகும்" என, ஆநிரைகட்கு உரியோர் பலரும் அஞ்சினர். அந்த அச்சம், அவர்களை விழிப்புடையாராகவும் ஆக்கிற்று. கோசர்களின் பயற்றங் காட்டிற்கு அருகிலேகூடத் தம்

ஆடுமாடுகள் சென்று விடாதவாறு, அவர்கள், மிகவும் எச்சரிக்கையுடனேயே காத்து வந்தனர்.

ஆடுமாடுகள், நன்மை தீமைகளைப் பகுத்து அறியும் அறிவு அற்றனவாகும். "இவை கோசர்களின் பயற்றங் காடுகள் ஆயிற்றே? இவற்றினுட் சென்று மேய்ந்தால், விளையும் பொல்லாங்குகள் மிகுதியாகுமே?" எனவெல்லாம் எண்ணி அறிகின்ற அறிவுநிலை அவற்றிற்குக் கிடையா. பச்சைப் பட்டினைப் பரப்பி வைத்தாற்போன்று, எப்புறத்தும் விளங்கிய பசுமையான பயற்றுப்பயிரின் வளமை, அவற்றை உண்டு களிக்கும் ஆர்வத்தையே அவற்றினிடத்துத் தூண்டின.

ஆகவே, எத்துணை விழிப்புடன் மேய்ப்போர் காத்து வரினும், சற்றே அவர்கள் அயர்ந்தனராயின், அந்த அளவி லேயே, ஆக்கள், அப் பயற்றங்காட்டினை நோக்கிச் செல்லத் தொடங்கின. அவற்றின் செயலினைத் தடுத்து, அவற்றைக் காட்டிற்கு மடக்கி ஓட்டிச் செல்வதற்குள்ளாக, மேய்ப் போரின் பாடு, எப்பொழுதுமே பெரும்பாடு ஆகிவிடும்.

இந் நிலையிலேதான், ஒரு நாள், ஒரு முதியவர், தம் ஆநிரைகளுடன் அந்தப்பக்கமாக வந்து கொண்டிருந்தனர். அந்த நிரையிலுள்ள பசுக்கள் கொழுமையுடன் விளங்கின. நல்ல வளமான மேய்ச்சற் காட்டிடத்தே, அவற்றைக் கொண்டு சென்று மேய்த்தற்கு விரும்பிய அவர், மிகவும் விழிப்புடனேயே அவற்றை ஓட்டிச் சென்றுகொண் டிருந்தார். இருப்பினும், அவை கொழுமையானவைகளாக இருந்தமையால், அவருடைய முயற்சி மிகவும் கடினமான தாகவே விளங்கிற்று. எங்ஙனமோ, ஒருவாறாக அவற்றை எல்லாம் அடக்கி, நெறிச்செல்லச் செய்து, அன்று அமைதி யடைந்தார் அவர்.

நாள்தோறும், பயற்றங் காட்டின் அருகே செல்லும் போது, ஆநிரைகள், ஆர்ப்பரித்து, அதனை நோக்கித் துள்ளிச்செல்லத் தொடங்குவதும், அம் முதியவர் அவற்றை மிகவும் தொல்லைப்பட்டு அடக்குவதும், வழக்கமாக நிகழ் வனவே. எனினும், அந்த வழியினையன்றி, மேய்ச்சற் காட்டினுள் நிரைகளை இட்டுச் செல்லுவதற்கு ஏற்ற வழியாகப் பிறிதொன்றும் இல்லையாதலினால், அவர், அந்த வேதனையைவிட்டு விலகிக்கொள்ளவும் இயலாமல் போயிற்று.

ஒரு நாள், வழக்கம்போலவே, அவர், தம் நிரைகளை மேய்ச்சற்காட்டிற்கு ஓட்டிச் சென்று கொண்டிருந்தார். அப் பெரியவர், அந்தக் காட்டருகே சென்றதும், சிறிது மழைத்தூறல் விழத் தொடங்கிற்று. திடுமெனப் பெரு மழையும் அதனைத் தொடர்ந்தது, முதுமையின் தளர்வால், அவர், ஒருபுறமாகச் சிறிது ஒதுங்கி நிற்கத் தொடங்கினார். பசுக்கள், மழைக்கு ஒதுங்கி நிற்பனபோன்று விளங் கினாலும், அருகிலே தோன்றிய பயற்றங் காட்டின் பசுமைக்கு அடிமையாயின.

மழை காரணமாக, அந்தக் காட்டினைக் காவல் காத்து நின்றோரும், தக்க ஒதுக்கிடங்களை நாடிச் சென்று விட்டனர். "காவலும் இல்லை; தம்மை அடக்கும் முதிய வரும் சோர்ந்து ஒடுங்கி இருக்கின்றனர்; நல்ல வாய்ப்பு நமக்கு" என, அவை கருதின போலும்! மிகவும் விரைவாக ஓடிச்சென்று, அப் பயற்றுப் பயிரினுள்ளே புகுந்து, வாயாரத் தின்னுதற்குத் தொடங்கிவிட்டன.

பூத்துப், பிஞ்சுவிட்டுச், சிறிது காலத்திற்குள் நல்ல பயனையும் அளிக்கவிருந்த பயற்றுப் பயிரானது,

ஆக்களின் கால்களால் மிதிபட்டும், அவற்ருல் உணப் பட்டும், பெரிதும் அழிவெய்தத் தொடங்கியது. இரண்டு நாழிகை அளவுக்குக், காவலர்களும் முதியவரும் ஆக்களின் அச்செயலை அறியாதவராய் இருந்தனர். அதன்பின், மழை சற்றுத் தணிந்ததும், பெரியவர் ஆக்களைத் தேடத் தொடங்கினர். அவை செய்துள்ள செயலைக் கண்டதும் அவர் பதறினர். அவற்றை, விரைந்து பயற்றங்காட் டினின்றும் புறமாகத் துரத்துவதற்குள், அவர் பட்டபாடு சொல்லுந்தரமன்று. ஒருவாறு, அவற்றை வெளிப்படுத்திய பின்னர், மிக்க வருத்தத்துடன், அவற்றைத் தம்முடைய தொழுவிற்கு அவர் ஓட்டிச் சென்றனர்.

காவலிருந்த முதுகோசர்கள், பெரியவர் தொழுவத்திற்கு ஓட்டிச் சென்றதன் பின்னரே, அந்த அழிபாடுகளைச் சென்று கண்டனர். அவர்களுடைய நெஞ்சம் கொதித்தது. 'இதனைச் செய்த கொடுமையாளரை, அவர் யாவரெனினும் உயிரோடு விடோம்' என்று சூளுரைத்து, நாற்புறமும் விரைந்தனர்.

"பயற்றங்காட்டிலே பசுக்கள் புகுந்து முற்றவும் அழிவு செய்துவிட்டனவாம்; காத்திருந்த முதியோர்கள், அந்தச் செயலைச் செய்தவரைக் கண்டுபிடிக்கச் செல்லு கின்றனராம்' எனக் கேள்வியுற்றதும், கோசர்கள் அனைவருமே மிகவும் ஆத்திரங் கொண்டனர். தாமும், 'அந்தக் கொடுமை செய்தவரைச் சென்று தக்கபடி ஒறுக்க வேண்டும்' என்ற, தணியாப் பெருஞ்சினத்துடனே, படை கொண்டு எழுந்தனர்.

'ஆக்களைத் தொழுவிற் சேர்த்த பின்னர், அவற்றிற்கு உரியவரான அம் முதியவர், பெரிதும் சிந்தனையில் ஆழ்ந்தார்.

"தவறு எம்முடையதே. எம் கவனக்குறைவினாலேயே இந்த அழிவு விளைந்தது. எனவே, பயற்றுக்கு உரியவர்களைக் கண்டு, அவர்க்கு ஏற்பட்ட அழிவினுக்கு ஈடுசெய்துவிட வேண்டும்" என்று கருதினார். அந் நினைவுடனே, தம் வீட்டிற்குச் செல்வதையும் விடுத்து, நேராகக், கோசர் களின் குடியிருப்பினை நோக்கி நடக்கத் தொடங்கினார்.

வழியிடையே, காவல் செய்து கொண்டிருந்த முது கோசர்களைக் கண்டதும், அவர்களிடத்தே, தம் ஆக்கள் செய்துவிட்ட எதிர்பாரா அழிவினை எடுத்துக் கூறி, அதனால் வந்த இழப்பினைத் தாம் ஈடு செய்துவிடுவ தாகவும், பிழையினைப் பொறுத்துக் கொள்ளுமாறும் தெரிவித்தனர்.

முதுகோசர்கள், அந்தப் பெரியவரின் பேச்சினைக் கேட்டனர். அவரே எதிர்ப்பட்டு வந்து, தம்முடைய குற்றத்தினைத் தாமே ஏற்றுக் கொண்டதும், இழப்பினை ஈடு செய்ய முன்வந்ததும், அவர்களுடைய கடுஞ்சினத்தை எள்ளளவும் மாற்றவில்லை. 'தம்மை, அந்தப் பெரியவர் சற்றும் பொருட்படுத்த மறந்தனர்' என்ற, உள்ளக் குமுறலே அவர்கட்கு மிகுதியாயிற்று. அவரைச் சினத் துடன் பற்றி இழுத்துத், தம் மனம்போனவாறு எல்லாம் அடித்தும் தாக்கியும், கொடுமைசெய்யத் தொடங்கினர்.

பெரியவரோ, அந்த முதுகோசரின் தாக்குதலைப் பொறுக்கமாட்டாது கதறினார். கடுங்குணம் உடைய முது கோசரின் காதுகளில், அவருடைய கதறலும் முறையீடும் சற்றும் விழவே இல்லை. அவர்கள், தம் கொடுமையை நிறுத்தவும் இல்லை. இறுதியில், "பயற்றங் காட்டிலே பசுக்கள் புகுவதைக் காணமறந்த நுமக்குக், கண்களும்

ஒரு கேடோ?" எனக் கேட்டவராக, அந்தப் பெரியவரின் இருகண்களையும், அவர் துடிக்கத்துடிக்கத் தோண்டி எடுத்துவிட்டனர். அவருடைய தொழுவத்துப் பசுக்களை யும் கவர்ந்து கொண்டு, தம் ஊர்க்கும் சென்றனர்.

கண்ணிழந்த அந்தப் பெரியவர் கதறித் துடி-துடித்தார். முதுகோசரிடத்தே பெற்ற கொடுமை, பண்பிற் சிறந்தாராக வாழ்ந்த அவருள்ளத்தே ஏற்படுத்திய வேதனை, கண்ணிழந்த வேதனையினுங் காட்டிற் கடுமையாயிருந்தது. இறுதியாக, வேதனைகொண்ட அவருடைய நெஞ்சமும் துடித்து ஓய்ந்துவிட்டது. அவர், அங்கேயே செத்து வீழ்ந்தார்.

அந்தப் பெரியவருக்கு, ஒரே ஒரு அழகுமகள் இருந்தாள். அவளுடைய பெயர் அன்னி மிஞிலி என்பது. பருவத்தால் மலர்ச்சியுற்றுப், பார்த்தோர் உள்ளம் களிதுள்ள, மணவிழவினை எதிர்நோக்கி இருந்தவள் அந்த மங்கை நல்லாள். 'தன் மகளுக்கு ஒரு நல்ல கணவனைத் தேடி, அவனிடத்தே அவளை ஒப்படைத்துவிட்டால், தம் பொறுப்புத் தீர்ந்துவிடும்; தாம் அமைதியாக உயிர் விடலாம்' என்று, கனவு கண்டுகொண்டிருந்தவர், அவளு டைய அருமைத் தந்தையான, அப் பெரியவர்.

இந்த நிலைமையிலே, 'கோசர்களின் பயற்றங் காட்டிலே உங்கள் ஆக்கள் புகுந்துவிட்டனவாம்; அவர்கள் உங்கள் ஆக்கள் அனைத்தையும் கவர்ந்து போயினராம்; நின் தந்தையின் கண்களையும் பறித்துக் கொடுமை செய்தனராம்; அவரும், அதனால் துடிதுடித்து இறந்து வீழ்ந்து கிடக் கின்றனராம்' என்று சிலர் சொல்லக் கேட்டதும், அந்த

அன்னி மிஞ்லியின் உள்ளத்தே, ஆயிரம் வேல்கள் அடுத் தடுத்துப் பாய்வன போன்றிருந்தது.

'அப்பா! அப்பா!' என்று, அவள் கதறிய கதறலும்' துடித்த துடிப்பும் சொல்லி முடியாது. பறக்கப் போகின்ற பருவத்துப் பறவைக் குஞ்சின் இறக்கைகளை ஒடித்துப் போட்டாற், கிடந்து அவை துடிக்கும் துடிப்பும் அவள் கொண்ட வேதனைக்கு ஓர் ஈடாகாது. அவ்வாறு, அழுதழுது புலம்பினுள் அவள். ஊரவரின் தேறுதல் உரைகள் அவளைத் தேற்றுவதற்கு இயலாதனவாகப் போயின. முடிவிலே, அவள் கொதிப்பு, அவளுடைய மென்மையாம் பெண்மையையும் வெற்றிகொண்டு' மேலோங்கி எழுந்தது. அவள் குரலிலே, அழுகையின் சாயை மறைந்து, சினத்தின் கடுமை சேரத் தொடங்கிற்று.

"ஊரவரே, கேளுங்கள்! என் தந்தைக்கு இந்தக் கொடுமையைச் செய்த முதுகோசரைப் பழிக்குப்பழி வாங்குவேன். அவர்களைக் கொன்றபின்னர் அன்றி, யான் அமையேன். என் எண்ணம் நிறைவுறும்வரை, யான் தூய ஆடைகளையும் உடேன்; கலத்திலிட்டு உண்ணு தலையும் செய்யேன்; அழகுப் புனைவுகளும் மேற் கொள்ளேன்; இது உறுதி! இது உறுதி" என்று, சூள் உரைத்தாள்.

அவளுரைத்த சூளினைக் கேட்ட ஊரவர் அனைவரும் திகைப்புற்றனர். ஆன்றோர், அவளுடைய பேதைமைக்குப் பெரிதும் இரங்கினர். சிலர், அவளுக்கு அறிவுரை கூறவும் முற்பட்டனர்.

"அன்னிமிஞிலி! யாங்கள் உரைப்பதனைக் கவனமாகக் கேள். நீயோ இளமைப்பருவத்தினள். மணம் பெற்று,

மணவாளனோடு மகிழ்வுற்று வாழ வேண்டியவள். நீ ஆத்திரப்படுதலும், சூள் உரைத்தலும் செய்தல் வேண்டா. தீமை செய்தார், தவறாது அதன் பயனை நுகர்வர். நின் உள்ளத்தே அமைதி கொள்க என்று, அவளைத் தேற்றினர்,

"என் முடிவை மாற்ற இயலாது. என் சூள் பொய் யாகாதவாறு காத்து முடிக்கும் வலியுடையாரை நாடி, இன்றே யான் செல்வேன். என் சூளுரை நிறைவேறும் நாள் என்றேனும் தவறாது வாய்க்கும். அந்நாள் வரையினும், யான் தூயதும் உடேன்; கலத்தினும் உண்ணேன்' என்றனள், அன்னி மிஞிலி.

அதன்மேலும், அவளுடைய மனத்துயரையும் உறுதி யினையும் மாற்றுதற்குப் பலவும் கூறினர் ஊரினர். எனினும், அவள் கொண்ட சீற்றம் தணிந்திலது. அவ்வூரை விட்டும், அன்றே அவள் வெளியேறிப் புறப்பட்டனள்.

கோசர்கள், கொடிய போர் மறவர்கள் ஆயினமையால், அவர்களுக்கு எதிராக, அன்னி மிஞிலியின் சூளுரையினை நிறைவேற்றுவதற்கு எழுப், பலரும் மறுத்தனர்.

காடுகள் தோறும், ஊர்கள் தோறும், நலிவுற்ற அவள் நடந்துநடந்து ஓய்ந்துபோனாள். "எனக்கு உதவுவார் எவருமே இந் நாட்டகத்து இல்லையோ?" எனக், கதறிப் புலம்பினாள்.

அப்பொழுது, அவளுக்கு இரங்கிய சிலர், "அம்மையே! எங்கணும் சுற்றிச் சுழன்று, நீயும் வருந்துவதனாற் பயன் ஏதுமில்லை. கோசரின் வலிமையோ பெரிது. அதன்

செருக்கினாலேயே, அவர்கள், நின் தந்தைக்கு அத்தகைய பெரும் கொடுமை விளைக்கவும் துணிந்தனர். ஆகவே, நீ நின்னுடைய முயற்சியிலே வெற்றியுறுவது எனக் கருதினையாயின், அழுந்தூர் என்னுமிடத்தே இருந்து அரசியற்றி வருவோனான, திதியனிடம் நேரே செல்க. அவன் ஒருவனே, இந்த வட்டாரத்துள், நின் சூளுரையினைச் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவன்" என்றனர்.

'உண்மை கூறினார், இவர்கள்; அழுந்தூர் வேளான ஆற்றல்சால் திதியனே அறத்தினை நிலைநிறுத்தும் நின்னுடைய எண்ணத்தினை நிறைவேற்ற வல்லான்' என, அனைவரும், ஒன்று பட்டவரேயாகக் கூறினர். அன்னி மிஞிலியும், அந்தத் திதியனை நாடிச் செல்வதற்கு எழுந்தனள்.

சோணாட்டுக் குறுநிலத் தலைவர்களுள், அழுந்தூர் வேளிர் குடியினர், அந்நாளில் மிக்க புகழுடையோராகத் திகழ்ந்து வந்தவராவர். காவிரிக்குக் கரைகட்டிய கருணையாளனும், கங்கைவரையும் வென்ற மாவீரனும், புலவோர் போற்றப் பெருவாழ்வு வாழ்ந்த புகழாளனுமான, கரிகால் வளவனைப் பெற்றளித்த தாய், இந்த, அழுந்தூர் வேளிர் குடிப்பிறந்தவளே யாவள்.

கரிகாலனின் சிறுபருவத்தே,அவனைப் பேணிக்காத்துப், பகை மன்னரை எல்லாம் அழித்து, உரிய நாளிலே அவன் முடியுடையவனாக விளங்கக் கண்டு பூரிப்புற்ற, அவன் தாய் மாமனான இரும்பிடர்த் தலையார் என்னும் நல்லோர் பிறந்த பெருமை உடையதும், இந்த, அழுந்தூர் வேள் குடியேயாகும்.

இவ்வாறு, சோழரோடு பெண்கொடுத்து உறவு கொள்ளுகின்ற பெரும் தகுதி பெற்றவராக, வாழ்வும் வளனும் வலிமையும் பண்பும் சிறந்தவராக வாழ்ந்துவந்த' அழுந்தூர் வேளிர் குடியிலே பிறந்தவன்தான் 'திதியன்' என்பானும் ஆவன்,

இவன், போராற்றலிற் சிறந்த பெரும் படை யணிகளுடனே, புலவோர் போற்றும் புரவலனுகவும் நாடு போற்ற நல்வாழ்வு வாழ்ந்து வந்தான்.

இவனுடைய அளப்பரிய பெரும்புகழும், வலிமையும் கண்டவன், இவனுக்கு அடுத்திருந்த ஒரு குறுநிலத் தலைவனுகிய அன்னி என்பவன். அவன் பெரிதும் கவலை கொண்டான். அந்தக் கவலை பொருமையாக விரைவிலே உருமாற்றம் பெற்று, நாளடைவிலே, பகைமை யாகவும் வளர்ந்துவிட்டது.

'எங்ஙனமும் திதியனை அழித்துவிடவேண்டும். அவனை அழித்தாலன்றித் தனக்கு அமைதியில்லை' என்ற முடி வுக்கு, அன்னி வந்துவிட்டான்.

தன்னுடைய அரிய நண்பனும், வேளிர் குடியின ருள்ளேயே பழம் பெரும் குடிப்பெருமை உடையோனும், நீடூர், உறத்தூர், மிழலை ஆகிய ஊர்களைக் கொண்ட குறு நிலத்திற்கு உரியோனுமான, வேள் எவ்வியின்பாற் சென்று, தன்னுடைய கருத்தினை அவன் வெளியிட்டான்.

வேள் எவ்வியோ நற்பண்புகள் மிகவும் வாய்க்கப் பெற்றவன். பாரி வள்ளல் பிறந்த குடியிலே, அவனுக்கு முற்பட்டோனுக வந்து தோன்றியவன்; வாள் வலியும் தோள்வலியும் மிகுதியாக உடையவன். ஆகவே, தன்

நண்பனுன அன்னியின் கருத்து அவனுக்கு ஏற்புடைய தாகப் படவில்லை.

'நண்பரே! திதியனே ஆற்றல் மிகுந்தவன். மேலும் நல்ல பண்புடையோனுகவும் திகழ்கின்ருன். அவனுடன் பகை கொண்டு, அவனுடைய காவன் மரமாம் புன்னையை அழிப்பதும், அவனையே அழிக்க முயல்வதும், நம்போல் வார்க்கு நன்றன்று'' என்ருன் எவ்வி.

''ஆயின், அதனுல், நாம் அச்சத்துடனேயே வாழ வேண்டியவராக இருக்கின்ருேமே? என்ருயினும், திதியன் நம்மை அழிக்கவும் முயலுதல் கூடுமன்ருே? வலிமையும் வளமும் புகழும் பெருகப்பெருக, 'பிறரை வென்று வாகை சூடிப் பெருமன்னனுகத் திகழ்தல் வேண்டும்' என்ற பேராசையும் எழுமன்ருே? ஆகவே, யான் கருதியதனை இப்போதே செய்வதுதான் சாலவும் சிறப்புடையது. 'இளை தாக முள்மரம் கொல்க' என்ருற்போன்று, இப்போது திதியனை அழிப்பதுதான் நமக்கு எளிதுமாகும். காலம் கடந்து, அவன் பெருவன்மையும் பெற்றுவிட்டனனுனல், பின்னர், நம்மால் எதுவும் செய்ய இயலாதுபோய்விடும்?'' என்று, தன் கருத்தினை விளக்கி உரைத்தான் அன்னி.

எவ்வியோ. அன்னியின் மனப்போக்கைப் புரிந்து கொண்டவனுக, யாதும் உரைப்பதும் செய்யாது, வாளா விருந்தான். பின்னர், அன்னி, 'தாங்கள் ஏதும் கூருது இருக்கின்றீர்களே?' என நினைவூட்டவும், தன் சிந்தனை கலைந்தவனுக, எவ்வியும் கூறத் தொடங்கினுன்.

''நண்பரே! போரிடுவதற்கு வேண்டாமென யான் கூறுவது கொண்டு, தாம் என்னைத் தவருகக்

கூடாது. மன்னர் மரபினரான நமக்குப் போரெனில் பூரிக்கும் பெருந்தோள் உடைமையே மிக்க சிறப்புத் தருவதாகும். எனினும், காரணம் ஏதுமின்றி, ஒருவனோடு போர்தொடுப்பதனை நான் ஒருபோதும் ஏற்பதில்லை. மறக் குலத்து மாவீரர் பலரின் இனிய உயிரினை, இவ்வாறு சிறு சிறு மனவேறுபாடுகளின் காரணமாகப், பலியிடுவது விரும்பத்தக்கதன்று" என்றான் எவ்வி.

"நண்பரே! தங்களின் அறிவுரைகட்கு யான் கடமைப் பட்டுள்ளேன். ஆயினும், தங்களுடைய அறிவுரைகளை ஏற்றுக்கொண்டு வாளாவிருக்கவும் என்னால் இயலாது. அதற்கு மிகவும் வருந்துகின்றேன். என் முடிவினை மாற்று வதற்கும் என்னால் இயலாது. தங்களை நாடி வந்ததன் கருத்து, தாங்களும் என்னைப்போன்றே திதியனைப் பற்றிக் கருதியிருப்பீர்கள்; திதியனுடன் நிகழ்த்தும் போருக்குத் தாங்களும் துணைபுரிவீர்கள் என்பதேயாகும். ஆயினும், தங்கள் உள்ளத்துப் போக்கினை அறிந்த பின்னர், அதனை, யான் தங்கள்பால் வற்புறுத்த விரும்பவில்லை. இனி, யான் ஒருவனே அதனைப் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டியதுதான்" என்று, அன்னி உரைத்தான்.

"நண்பரே! தாங்கள் விரும்புவதன்பால், என் மனம் ஏனோ செல்வதற்கு மறுக்கின்றது. அதனால், 'யான் திதி யனுக்கு அஞ்சுகின்றேன்' என்றும், தாங்கள் கருதுதல் கூடாது. திதியன், தன்னுடைய செருக்கினாலே மிகுந்து, தங்கள்மீது படையெடுத்தனனாயின், அப்போது, என்னு டைய பெரும்படையுடனே, யானே, தங்கட்கு உதவுவதற்கு முந்துவேன். அஃதன்றி, இத்தகைய வலுச்சண்டைக்கு வருவதென்பது என்னளவிலே ஒருபோதும் இயலாது" என்றான், எவ்வி.

அதற்குப் பின்னரும், எவ்வியை வற்புறுத்துவதற்கு விருப்பமில்லாத அன்னியும், தன்னுடைய படையணிகள் அனைத்தையும் போரிடுதற்குத் திரளுமாறு பணித்துப், போர் முயற்சிகளிலேயும் ஈடுபட்டான்.

அன்னியின் படைகள், ஒருநாள், மிக்க ஆரவாரத்துடன் திதியனின் நாட்டகத்தே புகுந்துவிட்டன. அவனுடைய எல்லைப்புறத்துக் காவற் கோட்டையான, குறுக்கை என்னுமிடத்தைத் தாக்கிப் பிடித்துக் கொண்டன. அங்கிருந்த திதியனின் காவன்மரமான புன்னையினையும் அவை சிதைத்துவிட்டன. தன்னுடைய வெற்றியின் பெருமிதத்திலே, அன்னியும் களிப்புற்றிருந்தான்.

குறுக்கையின் வீழ்ச்சிச் செய்தியினைக் கேள்வியுற்றதும், திதியன் மிகவும் கொதிப்பு அடைந்தான். அவன் கண்கள் அழலெனச் சிவந்தன. தன் நாட்டகத்தே புகுந்து அழிவுசெய்த அன்னியை, அழிக்கும் செயலை உடனே மேற்கொள்ளுமாறு தன் படையணிகளை ஏவினான். தானே, தன் படைகளின் தலைவனாகக் களம் நோக்கியும் சென்றான்.

குறுக்கைப் போர்க்களத்தே, திதியனின் படைமறவர்கள் ஆற்றிய கடும்போர், புலவர் நக்கீரர், வெள்ளிவீதியார், கயமனார் ஆகியவர் பலரும் போற்றும் புகழுடையதாயிற்று. வரம்பு கடந்து, எவ்வியின் வாய்மொழியினைக் கேட்டும் அமையாது, புன்னையை அழித்த அன்னி, களத்திலேயே வீழ்ந்து மடிந்தான். அவனுடைய படையணிகள் பாழுற்றுச் சிதறி ஓடின. திதியன் வெற்றி பெற்றான். பெருவலிமை யுடையவனாயினும், போற்றுதற்கு உரியதல்லாத செயலைச் செய்வதற்கு முயன்ற, அந்த

அன்னியின் வீழ்ச்சியை, அகநானூற்றுப் பாடல்கள் எடுத்து உரைக்கும்.

இத்தகைய பேராற்றலும், பெரும்புகழும், ஆண்மைத் திறனும் ஒருங்கே அமையப்பெற்றவன்தான் அழுந்தூர்த் திதியன். அவனுடைய ஆற்றல்களைக் கேட்டு அறிந்த அன்னி மிஞிலியின் நெஞ்சத்தும், 'அவனே தன் துயரினைத் தீர்க்க வல்லவன்' என்ற உறுதி பிறந்தது. அவள் அழுந்தூர் நோக்கிச் சென்றாள்.

போர் வன்மையுடன், புலவர் போற்றும் தமிழன்பும், பாணரையும் பரிசிலரையும் பேணும் பண்பும் அமைந்த வனாக விளங்கிய திதியன், தன்னுடைய நாளவையின் கண்ணே, மிக்க களிப்புடன், பரிசிலர் ஆர்ப்பரிக்க, அவர்க்கு உவப்புடன் கலன்கள் பலவும் வழங்கிக்கொண்டே அமர்ந்திருந்தனன். அத்தகைய வேளையிலேதான், துயரத்தின் சாயை படிந்த, சோர்ந்து மெலிந்த அன்னி மிஞிலியும் அங்குச் சென்று, அவனை வாழ்த்தி நின்றாள்.

அவளுடைய இளமையின் எழில் திதியனின் உள்ளத்தே நிலைபெற்றது. எனினும், அந்தப் பேரெழில் நலன் எல்லாம் அறவே பாழ்பட்டுப்போகுமாறு, அவள் கொண்டிருந்த உருமாற்றமும் தளர்வும் அவன் நெஞ்சினைப் பெரிதும் வாட்டியது. அவன் உள்ளத்தே அருள் பெருக் கெடுத்தது. அவன், அவளைக் கனிவுடன் நோக்கினான்.

"பெண்ணே! நீ யாரோ? நின் குறைதான் யாதோ? அதனை விளங்க உரைத்தால், அதனைப் போக்குவதற்கு என்னால் இயன்றன செய்வேன். என்னை உறுதியாக நம்புவாயாக. நின் வருத்தத்திற்கான காரணங்களையுங் கூறுவாயாக" என்றனன்.

அவன் கூற்றைத் தாமும் அங்ஙனமே ஏற்பவர் போன்று, அவையினர் அனைவருமே விளங்கினர் அவளுடைய, இரங்குவதற்கு உரிய தளர்வும் மெலிவும் கன்மனத்தையும் கரைக்கும் தன்மையவாயிருந்தன. எனவே, அவள்பால், அந்த அருள்நிறைந்த நிதியனின் அவை கருணைகொண்டதில் எத்தகைய வியப்பிற்குமே'

கலங்கிய கண்களினின்றும் வெள்ளம்போற் பெருக் கெடுத்துக் கண்ணீர் பாய்ந்தோடச், சொல்லும்போதே துயரச் சுமையின் மிகுதியாற் குரலும் தடுமாற்றம் அடையத், தன் துயரையும் தானுரைத்த சூளினையும், அன்னி மிஞிலியும் அந்த அவையிடத்தே எடுத்து உரைத் தாள். அதனைக் கேட்ட அவையினர் அனைவரும் நெஞ்சம் கொதித்தனர். 'நீதியற்ற கோசர்களை நெறிப்படுத்த வேண்டும்' எனக் குமுறினர். அவையின் கருத்தினை அவர்கள் தலைவனாகிய நிதியனும் அங்ஙனமே ஏற்றனன். அவன் உள்ளமும், அந்த முடிவிற்கேதான் வந்திருந்தது. எனினும், அன்னி மிஞிலியின் துயர் தீர்ப்பதானால் அதற்காக மேற்கொள்ளவேண்டிய போரின் கடுமை யும் அவன் நினைவிலே எழுந்தது. எனவே, அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

"வேண்டி நின்ற அன்னி மிஞிலியின் தோற்றம், அறக் கடவுளே பெண்ணுருவில் வந்து நின்று, அறங்காக்க வேண்டி அவனிடத்தே முறையிடுவதுபோன்று இருந்தது" என அவையினர் கருதினர்.

அமைதியைப் போக்கியவாறு எழுந்தது நிதியனின் ஆண்மைக் குரல். "பெண்ணே! நின் துயரத்தினைக் கேட்கும்போது, நின் தந்தைக்கு அறக்கொடுமை

செய்தோரை ஒறுத்து, நின் குறையை முடிக்கவே எண்ணுகின்றேன். எனினும், கோசர்களின் போர் மறத்தினை எண்ணும்போது, யான் மேற்கொள்ள வேண்டிய பொறுப்பின் கடுமையும் புலப்படுகின்றது. எனவே, நீ நின் துயரங்களை எல்லாம் மறந்து, நல்வாழ்வு வாழ்வதற்கு வேண்டியன அனைத்தும் தருகிறேன். அச்சமேதுமின்றி, என் நாட்டகத்தேயே வாழ்ந்து இன்புற்றிருப்பாயாக. பழி போக்கும் முயற்சியைப் பின்னர் நாம் கருதலாம்" என்றான் அவன்.

"அரசே! அறநெறிக்கு மாறுபட்டு, என் தந்தையின் கண்களைக் களைந்தவர் முதுகோசர்கள். அந்தத் துயரம் தாங்காது, என் தந்தை துடிதுடித்து மாண்டார். அதனை மறந்துவிடுவதென்றால், என் தந்தை வைத்துச் சென்றிருக்கும் பெருஞ்செல்வத்துடன், நான் அவ்விடத்தேயே வாழ்ந்திருக்கலாம். உணவினையும் வெறுத்து, நல்லுடை விரும்புதலையும் ஒழித்து, இங்ஙனம் காடும் நாடும் கதறிக்கதறி அலைந்து நான் சோர்ந்திருக்கவே வேண்டாம். குடிப் பழியைத் துடைப்பதினும், உயிர் வாழ்வதோ பெரிது? கோமானே! நற்குடிப் பிறந்த நான், எங்ஙனம் பழியோடு உயிர்வாழ்வேன்? மன்னவா! தங்கள் ஆற்றலையும், அறநெறி நிற்கும் உறுதியினையும், அருள் உள்ளப் பெருக்கின் செவ்வியினையும் கேட்டுத் தாங்களே எனக்குத் துணையெனத், தங்களையே நாடி வந்தேன். என்னை வாழ்விப்பதோ, அன்றிக் கைவிட்டு விடுவதோ, தங்களின் விருப்பத்தைப் பொறுத்தது" என்றாள் அன்னி மிஞிலி.

திதியன் அவளுடைய நிலைமையை நன்கு உணர்ந்தான். அவையை நோக்கினான். தளபதிகளையும் உற்று நோக்

கினான். அவை, அன்னி மிஞிலிக்கு உதவுவதற்கே விரும்பிற்று. தளபதிகளோ, கோசர்களுடன் நிகழ்த்தும் போரின் கொடுமையைக் குறிப்பிட்டு, அதனை மேற் கொள்ள விருப்பமற்றவர் போலத் தோன்றினர். அவர்கள் கருத்தினை அவர்களின் முகத் தோற்றத்தினின்றும் அறிந்த திதியன், தன் முடிவையும் கூறத் தொடங்கினான்.

"அழுந்தூர் நாட்டு ஆன்றோரே! ஆற்றல்சால் படை மறவர்களே! அன்னி மிஞிலியின் உருக்கமான நிலைக்கு நாம் இரங்குவதோ, அன்றி இரங்காமலிருப்பதோ, இப்போது நம்முன் விளங்கும் பெரிதான சிக்கல் அன்று. ஆக்கள் புகுந்ததெனா, அதற்குரியவரின் கண்களை அழித்து, அவரைக் கொன்ற வன்கொடுமையாளரை அங்ஙனமே வாழவிடுவதோ? அவர் போக்கினாலே தமிழறம் குலைந்து போவதையும், காப்பு அற்றவர் கண்ணீர் வடிப்பதையும், நெடுகிலும் நிகழவிடுவதோ? அவரை அழித்து, அறத்தின் வலுவை உணர்த்தி, இந்த அரிவையின் கண்ணீரை மாற்றுவதோ? இவைதாம் நாம் கருத வேண்டுவன.

"வேளிர் குடியினரின் வீரமும் பண்பும் விளக்கமுற வேண்டுமாயின், நாம் இந்த நற்பணியை மேற்கொண்டே ஆக வேண்டும். இந்தப் போர் ஒரு கடமைப் போர். அறத்தின் பெருமையைக் காப்பதற்கு ஆற்றும் ஓர் அறப் போர். அயர்ந்த ஒரு நங்கைக்கு உதவும் கருணைப் போர் இதனை நாம் மேற்கொள்வது நம் புகழினை என்றும் நிலை பெறச் செய்யும். தோல்வி காணாத நாம் இதனை மறுத்து விடின், அறம் நம்மையும் இகழ்ந்துவிடும். எனவே, அறம்

காப்போம்! அறப்போர் இயற்றுவோம்! எழுமின்!" என்று முழங்கினான் திதியன்.

அவன் உரைத்தவாறே அழுந்தூர்ப் படைகள் திரண்டன. அவனே தலைமை தாங்கி அதனை நடத்திச் சென்றான். 'கொடுமை செய்த முதுகோசர்களை அழித்து' வெற்றியுடன் அழுந்தூர்க்கும் மீண்டான். அறக்கொடுமை செய்தோரை அழித்து, அறப்போர் ஆற்றிச், செயற்கு அரிய செய்து சிறந்தான் அழுந்தூர் வேள். வெற்றி முரசம் முழங்க அவன், அழுந்தூர்க்கு வந்தபோது, அழகிய அணிபலபூண்டு, அன்னி மிஞிலியும் மகிழ்வுடன் அவனை வாழ்த்திப் போற்றினாள். அவனுடைய கருணைப்பெருக்கை அவள் மட்டுமே போற்றினாள் என்பதன்று; ஆன்றோர்கள் பலருமே அந்நாளிற் போற்றி பாடினர்.

பெரும் புகழ்பெற்ற சான்றோராகிய பரணர்பெருமான் அகநானூற்றுப் பாடல்களுள், திதியனின் இந்த அறப் போர் நிகழ்ச்சியினைக் குறித்து, அவனுடைய செயற்கருஞ் செயலை நிலைபெற்ற புகழுடையதாகச் செய்துள்ளனர். செயற்கரிய செய்த அழுந்தூர் வேளிர்குலச் செம்மலின் அறப்போரினை நாமும் நினைந்து நாளும் போற்று வோமாக!

# 19. சான்றோரின் செய்யுட்கள்

இந்த நூலின் அமைவிற்கு ஆதாரமாக விளங்குபவன, ஒல்காப் பெரும்புகழ்ச் சங்கச் செழுந்தமிழ் நூற்களி னுள்ளே, சங்கச் சான்றோர்கள் அருளிய செய்யுட்களே யாகும். அவற்றின் அடிப்படையிலே உருவானதே இந் நூல். எனவே, அவற்றை எல்லாம் இவ்விடத்தே தருகின்றோம்.

## 2. வரி மறுத்த உழவர்

'ஆன் முலை அறுத்த அறனி லோர்க்கும்,
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்,
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்,
வழுவாய் மருங்கில் கழுவாயும் உள' என,
'நிலம்புடை பெயர்வ தாயினும், ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்' என,
அறம்பா டின்றே ஆயிழை கணவ!
'காலை அந்தியும், மாலை அந்தியும்.
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பால்பெய் புன்கம் தேனொடு மயக்கி,

குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு,
இரத்தி நீடிய அகன்றலை மன்றத்து,
கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி,
அமலைக் கொழுஞ்சோறு ஆர்ந்த பாணர்க்கு
அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்,

எங்கோன், வளவன் வாழ்க!' என்று, நின்
பீடுகெழு நோன்றாள் பாடேன் ஆயின்,
படுபுஅறி யலனே, பல்கதிர்ச் செல்வன்;
யானோ தஞ்சம்; பெரும! இவ் வுலகத்து,
சான்றோர் செய்த நன்று உண்டாயின்,

இமயத்து ஈண்டி இன்குரல் பயிற்றி,
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல் துளியினும் வாழிய, பலவே!

புறநானூற்று 34-வது பாடல் இது; சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்கிழார் பாடியது.

இதன்கண் கிள்ளிவளவன் பாணர்க்கு அருள் செய்வோனாக விளங்கிய பெருவள்ளன்மையைப் புகழ்ந்து போற்றும் புலவர், அவனுடைய புகழைப் பாடாதது செய்ந்நன்றி கொன்ற பழியோடு பொருத்தமுடையது ஆகும் என்கின்றார். செய்ந்நன்றி கொல்லுதல் பழிகளுள்ளும் மிக்க பெரும்பழியாம் என்பார், 'ஆன்முலை அறுத்தல்' முதலிய கொடுமைகளைக் காட்டி உலகமே புரண்டாலும் செய்ந்நன்றி கொன்றவனுக்கு உய்தியே இல்லை எனவும் வலியுறுத்துகின்றார்.

கிள்ளிவளவன் கருவூரை முற்றியிருந்தசெய்தியினையும் இவனுடைய முற்றுகைக்கு அஞ்சிய சேரமான் கதவடைத்து உள்ளே இருந்துவிட்ட செய்தியையும், இதே ஆலத்தூர்

கிழார் தம்முடைய மற்றொரு செய்யுளிற் கூறுகின்றார். அது வருமாறு,

செறியரிச் சிலம்பின், குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கின் தெற்றி யாடும்
தண்ணான் பொருநை வெண்மணல் சிதைய,
கருங்கைக் கொல்லன் அரம்செய் அவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலின், நிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்ப, காவுதொறும்
கடிமரம் தடியும் ஓசை தன் ஊர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப,
ஆங்கினி திருந்த வேந்தனோடு, ஈங்கு நின்
சிலைத்தார் முரசம் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தகவு உடைத்தே.

புறம்—36

இதன்கண் கிள்ளிவளவன் சேரனுக்குரிய கருவூர்க் கோட்டையினை முற்றியிருந்த செய்தி புலவராற் கூறப் பெறுகின்றது. வளவனின் வீரர்கள் கோட்டையைச் சூழ விருந்த காவற்காடுகளின் மரங்களை வெட்டி அழிக் கின்றனர். அந்த மரம் தடியும் ஓசை கருவூர்க் கோட்டை யுள் காவலுடைய அரண்மனைக்கண் இருந்த சேரமானின் காதுகளிலே விழுந்தும், அவன் போரிடாது கதவடைத்து இருந்தான். அதனைக் குறிப்பிட்டு, அத்தகைய வீரமற்ற ஒருவனுடன் போரிடுவது மறத்துறை மாண்பன்று; அது நாணங் கொள்ளும் தகைமை உடையது என்று கூறு கின்றார் புலவர்.

கிள்ளி வளவன் கருவூர்க் கோட்டையை முற்றி அழித்து வென்றனன் என்ற செய்தியை விளக்குவது அடுத்து வருகின்ற பாடல் :

கராஅம் கலித்த குண்டுகண் அகழி,
இடம் கருங் குட்டத்து உடன்தொக்கு ஓடி,
யாமம் கொள்பவர் சுடர்நிழல் கதூஉம்
கடுமுரண் முதலைய நெடுநீர் இலஞ்சி,
செம்புஉறழ் புரிசை, செம்மல் மூதூர்,
வம்பணி யானை வேந்தகத்து உண்மையின்
நல்ல என்னாது, சிதைத்தல்
வல்லையால், நெடுந்தகை! செருவத் தானே,

புறம்—37 (7-14)

இவனுடைய இந்தப் போர்வெற்றி இமயவரம்பனைக் குறித்தது என விளக்கும் செய்யுளைச் செய்தவர் மாறோக்கத்து நப்பசலையார் என்பார். மேற்குறித்த புறம் 37-வது செய்யுளைச் செய்த அவரே இந்த 39-வது செய்யுளையும் செய்துள்ளனர். அது வருமாறு,

புறவின் அல்லல் சொல்லிய கறையடி
யானை வான்மருப்பு எறிந்த வெண்கடைக்
கோல்நிறை துலாஅம் புக்கோன் மருக!
ஈதல் நின் புகழும் அன்றே; சாதல்
ஒன்னார் உட்கும் துன்னருங் கடுந்திறல்

தூங்கெயில் எறிந்தநின் ஊங்கணோர் நினைப்பின்,
அடுதல்நின் புகழும் அன்றே; கெடுவின்று
மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து;
அறம்நின்று நிலையிற் றாகலின், அதனால்
முறைமை நின் புகழும் அன்றே; மறம் மிக்கு

எழுசமம் கடந்த எழுவுறழ் திணிதோள்,
கண்ஆர் கண்ணிக் கலிமான் வளவ!
யாங்கனம் மொழிகோ யானே—ஓங்கிய

வரையளந்து அறியாப் பொன்படு நெடுங்கோட்டு
இமயம் சூட்டிய ஏம விற்பொறி.
மாண்வினை நெடுந்தேர், வானவன் தொலைய,
வாடா வஞ்சி வாட்டும் நின்
பீடுகெழு நோன்தாள் பாடுங் காலே?

புறம்—39

இவனைப் போற்றிப்பாடும் மற்றொருவர் கோவூர்கிழார். அவர் சொல்வன:

காலனும் காலம் பார்க்கும்; பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய,
வேண்டிடத்து அடூஉம் வெல்போர் வேந்தே!

புறம்—41 (1-3)

மற்றும், இடைக்காடனூர் என்பாரும் இவன் அருளைப் பின்வருமாறு போற்றுவார்:

ஆறு ஈகை அடுபோர் அண்ணல்! நின்
யானையும் மலையின் தோன்றும்; பெரும! நின்
தானையும் கடலென முழங்கும்; கூர்நுனை
வேலும் மின்னின் விளங்கும்; உலகத்து
அரைசு தலைப் பனிக்கும் ஆற்றலை ஆகலின்,

புரை தீர்ந்தன்று; அது புதுவதோ அன்றே;
தண்புனற் பூசல் அல்லது, நொந்து,
'களைக, வாழி வளவ!' என்று, நின்
முனைதரு பூசல் கனவினும் அறியாது,
புலிபுறங் காக்கும் குருளை போல,

மெலிவில் செங்கோல் நீ புறங் காப்ப—

புறம்—42 (1-11)

*மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி*
*நிலவரை இழிதரும் பல்யாறு போல,*
*புலவர் எல்லாம் நின் நோக்கினரே.*

*புறம்—42 (19-21)*

இத்தகைய புகழும் வலிமையும் வள்ளன்மையும் உடைய பேரரசனையே வெள்ளைக்குடி நாகனார் எதிர்த்துச் சென்றனர். அவருடைய அறப்போரின் பெருமையைக் காட்டுவது குறித்தே, வளவனின் ஆற்றல்கள் முறையே ஒருவாறு மேற்கண்ட செய்யுட்களை யொட்டி வலியுறுத்தப் பெற்றன. இனி, வெள்ளைக்குடி நாகனாரின் பாடல்வருமாறு:

*நளியிரு முந்நீர் ஏணி யாக,*
*வளியிடை வழங்கா வானம் சூடிய*
*மண் திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்,*
*முரசு முழங்கு தானை மூவருள்ளும்,*
*அரசு எனப்படுவது நினதே, பெரும!*

*அலங்கு கதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்,*
*இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும்,*
*அந்தண் காவிரி வந்து கவர்பு ஊட்டத்,*
*தோடுகொள் வேலின் தோற்றம் போல,*
*ஆடுகண் கரும்பின் வெண்பூ நுடங்கும்*

*நாடெனப் படுவது நினதே அத்தை; ஆங்க*
*நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே!*
*நினவ கூறுவல்; எனவ கேண்மதி!*
*அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து*
*முறை வேண்டு பொழுதில் பதன் எளியோர் ஈண்டு*

*உறை வேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே;*
*ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ*

மாக விசும்பின் நடுவுநின் றாங்கு,
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ? அன்றே; வருந்திய
குடிமறைப் பதுவே; கூர்வேல் வளவ!
வெளிற்றுப் பனந் துணியின் வீற்றுவீற் றுக் கிடப்பக்
களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை,
வருபடை தாங்கி, பெயர்புறத்து ஆர்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே;
மாரி பொய்ப்பினும், வாரி குன்றினும்,
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்,
காவலர்ப் பழிக்கும், இக் கண்ணகன் ஞாலம்;
அதுநற்கு அறிந்தனை ஆயின், நீயும்
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது,
பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்,
குடிபுறந் தருகுவை ஆயின், நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே.

புறம்—35

இத்தகைய பாக்கள் பலவற்றையும் அடிப்படையாகக் கொண்டு உருவானதே 'வரி மறுத்த உழவர்' எனும் பகுதியாகும்.

## 3. அதிக வரிக்கு எதிர்ப்பு

அறிவுடை நம்பி, 'மகப்பேறு இல்லாதவர்க்கு வாழ் நாளில் பயக்குறை தீர்ந்ததில்லை' எனக் கூறிய செய்யுள்:

படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும், இடைப்படக்

குறுகுறு நடந்து சிறுகை நீட்டி,
இட்டும், தொட்டும் கவ்வியும், துழந்தும்,
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்,
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை-தாம் வாழு நாளே.

புறம்—188

பிசிராந்தையாருக்கும் கோப்பெருஞ் சோழனுக்கும் இடையே நிலவியிருந்த நட்பின் நெருக்கத்தைப் போற்றிப் பொய்கையார் சொன்ன செய்யுள்:

நினைக்குங் காலை மருட்கை உடைத்தே;
எனைப்பெருஞ் சிறப்பினோ டீங்கிது துணிதல்;
அதனினும் மருட்கை உடைத்தே, பிறன்நாட்டுத்
தோற்றம் சான்ற சான்றோன் போற்றி,
இசைமர பாக, நட்புக்கந் தாக,
இனையதோர் காலை ஈங்கு வருதல்;
'வருவன்' என்ற கோனது பெருமையும்,
அதுபழு தின்றி வந்தவன் அறிவும்.
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே,
அதனால், தன்கோல் இயங்காத் தேயத் துறையும்
சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்றிசை
அன்னோனை இழந்த இவ் வுலகம்.
என்னா வதுகொல்? அளியது தானே!

புறம்—217

பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பிக்குச் சொல்லிய பாடல் இது. இதன் அமைதியை நன்கு கவனிக்கவும்.

காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே,
மாநிறை வில்லதும், பன்னாட் காகும்;

நூறுசெறு ஆயினும், தமித்துப்புக்கு உணினே,
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே,

கோடி யாத்து, நாடு பெரிது நந்தும்;
மெல்லியன் கிழவன் ஆகி, வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு,
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்,
யானைபுக்க புலம் போலத்
தானும் உண்ணான், உலகமும் கெடுமே.

புறம்—184

## 4. உயிர் காத்த உத்தமர்

கோவூர் கிழார், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்கு இடுதற்கு முயன்றகாலைப் பாடியது.

நீயே, புறவின் அல்லல் அன்றியும், பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;
இவரே, புலனுழு துண்மார் புன்கண் அஞ்சித்,
தமதுபகுத் துண்ணும் தண்ணிழல் வாழ்நர்;
களிறுகண் டழூஉம் அழாஅல் மறந்த
புன்றலைச் சிறாஅர் மன்று மருண்டு நோக்கி,
விருந்தின் புன்கணோ உடையர்;
கேட்டனை ஆயின், நீ வேட்டது செய்ம்மே!

புறம்—46

## 5. புலவரைக் காத்த புலவர்

நலங்கிள்ளி ஆவூரை முற்றியபோது, அடைத்து இருந்த நெடுங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடியது :

இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா,
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ,
திருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி,
நிலமிசைப் புரளும் கைய, வெய் துயிர்த்து,
அலமரல் யானை உரும்என முழங்கவும்,
பாலில் குழவி அலறவும், மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும், நீரில்
வினைபுனை நல்இல் இனைகூஉக் கேட்பவும்,
இன்னாது அம்ம, ஈங்கினி திருத்தல்;
துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்!
அறவை யாயின், 'நினது' எனத் திறத்தல்;
மறவை யாயின், போரொடு திறத்தல்;
அறவையும் மறவையும் அல்லை யாக,
திறவாது அடைத்த திண்நிலைக் கதவின்
நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தகவு உடைத்து, இது காணுங்காலே.

புறம்—44

கோவூர் கிழார், இளந் தத்தனின் உயிரைக் காக்கும் பொருட்டாகப் பாடி அவரை உய்யக்கொண்ட பாடல்:

வள்ளியோர்ப் படர்ந்து, புள்ளின் போகி,
'நெடிய' என்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடி,
பெற்றது மகிழ்ந்து, சுற்றம் அருத்தி,
ஓம்பாது உண்டு, கூம்பாது வீசி,
வரிசைக்கு வருந்தும் இப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீது அறிந்தன்றோ? இன்றே; திறப்பட
நண்ணார் நாண, அண்ணாந்து ஏகி,

ஆங்கினி தொழுகின் அல்லது, ஓங்குபுகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே.

புறம்—47

## 6. பகை தீர்த்த பண்பாளர்

குமணன் வழங்கிய பெருஞ் செல்வத்தைத் தன் மனைவி யிடங் கொடுத்துப் பெருஞ்சித்திரனார் கூறிய செய்யுள்.

நின்நயந்து உறைநர்க்கும், நீநயந்து உறைநர்க்கும்,
பன்மாண் கற்பின் நின்கிளை முதலோர்க்கும்,
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்,
இன்னோர்க் கென்னாது, என்னொடும் சூழாது,
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி—மனைகிழ வோயே!
பழந் தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே.

புறம்—163

மீண்டும் வறுமை வந்து சூழப் பெருஞ்சித்திரனார் அதனை நினைந்து வருந்திக் குமணனைக் காணச் சென்று பாடியது:

ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்,
ஆம்பி பூப்பத் தேம்புபசி உழவா,
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி,
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉம்தன் மகத்துமுகம் நோக்கி,
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண் என்
மனையோள் எவ்வம் நோக்கி, நினைஇ,
நிற்படர்ந் திசினே, நற்போர்க் குமண!

என்நிலை அறிந்தனை யாயின், இந்நிலைத்
தொடுத்தும் கொள்ளா தமையலென்—அடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்,
மண்ணமை முழவின், வயிரியர்
இன்மை தீர்க்கும் குடிப்பிறந் தோயே,

புறம்—164

பெருஞ் சித்திரனார், இளவெளிமான் கொடுத்த சிறிதான பரிசிலைப் பெறாது பாடியது :

......ஓங்கு வரைப்
புலிபார்த் தொற்றிய களிற்றிரை தப்பின்,
எலிபார்த் தொற்றா தாகும்; மலிதிரைக்
கடன்மண்டு புனலின் இழுமெனச் சென்று,
நனியுடைப் பரிசில் தருகம்,
எழுமதி, நெஞ்சே! துணிபுமுந் துறுத்தே.

புறம்—237 (15-20)

அவர், குமணனைப் பாடிப்பெற்ற பரிசிலான களிற்றினை வெளிமான் ஊர்க் காவன்மரத்திற் பிணித்துக் கூறியது:

இரவலர் புரவலை நீயும் அல்லை;
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;
இரவலர் உண்மையும் காண், இனி; இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண், இனி; நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த
நெடுநல் யானை எம் பரிசில்;
கடுமான் தோன்றல்! செல்வல் யானே.

புறம்—162

அவர், இளங் குமணனிடத்தே சென்று, தாம் காட்டகத்தே குமணனைக் கண்டதையும், அவன் கொடுத்த வாளையும் பற்றிச் சொல்லுதல் :

மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே;
துன்னருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்,
இன்மையின் இரப்போர்க் கீஇயா மையின்,
தொன்மை மாக்களின் தொடர்பறி யலரே;

தாள்தாழ் படுமணி இரட்டும், பூநுதல்,
ஆடியல் யானை பாடுநர்க்கு அருகாக்
கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்
பாடிநின் றனெனாகக், 'கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
நாடிழந் ததனினும் நனியின் னா'தென,
வாள்தந் தனனே, தலைஎனக் கீயத்
தன்னின் சிறந்தது பிறிதொன் றின்மையின்;
ஆடுமலி உவகையொடு வருவல்,
ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே

புறம்—165

## 8. மாவினை அழித்த மாவீரர்

பாழியிலே வேளிர்கள் தம்முடைய செல்வத்தைப் பேணி வைத்திருந்தமை பற்றிய செய்திகள்.

நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்னினும்......

அகம் 258 (1-3)
பரணர் பாடியது.

அணங்குடை வரைப்பிற் பாழி யாங்கண்
வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த
அருங்கல வெறுக்கை......

அகம்—372 (3-5)
பரணர் பாடியது.

*கறையடி யானை நன்னன் பாழி*
*ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்*
*கூட்டெதிர் கொண்ட.........*

அகம்—142 (9-11)
பரணர் பாடியது.

*சூழியானைச் சுடர்ப்பூண் நன்னன்*
*பாழியன்ன கடியுடை வியனகர்*

அகம்—15 (10-11)
மாமூலனார் பாடியது.

நன்னன் பெண்கொலை புரிந்ததும், அந்தப் பெண்ணைப் பெற்றோர் வேண்டுதலுக்கும் இரங்காது அவன் பழிசெய்ததும் குறிக்கும் செய்யுள்:

*மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை*
*புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு*
*ஒன்பதிற் றொன்பது களிற்றொடு அவள்நிறை*
*பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்*
*பெண்கொலை புரிந்த நன்னன்.*

குறுந்—292
பரணர் பாடியது.

பெண்கொலை புரிந்த நன்னனின் பழி பிற்காலத்தும் நிலைபெற்றமை அடியில் வரும் செய்யுளாற் புலனாகும். இளங்கண்டீரக்கோவும் இளவிச்சிக்கோவும் உடனிருந்த போது, முன்னவனைத் தழுவிப் பின்னவனைத் தழுவாத பெருந்தலைச் சாத்தனாரை, அவன் ஏன் என்று கேட்கவும், அவர் அதற்குக் காரணம் சொல்வதாக அமைந்தது அடியில் வருவது:

*.........பொலந்தேர்*
*நன்னன் மருகன் அன்றியும், நீயும்*
*முயங்கற் கொத்தனை மன்னே!*

புறம்—151 (7-8)

கோசர்கள் நன்னனின் நறுமாவை அழித்த செய்திகளைக் கூறும் சான்றோர் செய்யுட்கள் :

-நன்னன்

நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்று மொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே.

குறுந்—73
பரணர் பாடல்.

இத்துடன் முன்குறித்த 292-வது குறுந்தொகைச் செய்யுளையும் இணைத்து நோக்குக.

அகுதையைப் பற்றிய செய்யுட்கள் அடியில் வருவன:

பொய்யா கியரோ! பொய்யா கியரோ!
பாவடி யானைப் பரிசிலர்க்கு அருகாச்
சீர்கெழு நோன்தாள் அகுதைகண் தோன்றிய
பொன்புனை திகிரியின் பொய்யாகியரோ!

புறம்—233
வெள்ளெருக்கிலையார் பாடல்.

உண்போன் தானறுங் கள்ளின் இடச்சில
நாவிடைப் பல்தேர் கோலச் சிவந்த
ஒளிறுஒள் வாடக் குழைந்தபைந் தும்பை,
எறிந்திலை முறிந்த கதுவாய் வேலின்,
மணநாறு மார்பின், மறப்போர் அகுதை,
குண்டுநீர் வரைப்பின் கூடல்—

புறம்—347
கபிலர் பாடல்.

ஆய்மகளிர் பூசலைக் களைந்த அகுதையின் புகழைப் போற்றும் செய்யுட்கள்: அந்தச் சம்பவம் நிகழ்ந்தது, வேள் ஆய் எயினன் நன்னனுக்கு உதவியாகச் சென்று,

மிஞிலியோடு போரிட்டு வீழ்ந்த பொழுதிலாகும். எனவே, ஆய் எயினனின் தொடர்பான செய்திகளையும் இந்தப் பகுதியின்கண் காணவேண்டும்.

மிஞிலி ஆய் எயினனைக் கொன்றது:

கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி
புள்ளிற் கேம மாகிய பெரும் பெயர்
வெள்ளத் தானை அதிகற் கொன்றுவந்து
ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பு......

அகம்—242 (9-14)
பரணர் பாடல்

கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்
காணிய செல்லாக் கூகை நாணிக்
கடும்பகல் வழங்கா தாஅங்கு

அகம் 248 (7-10)
பரணர் பாடல்

ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
அடுபோர் மிஞிலி செருவிற்கு உடைஇ
முருகுறழ் முன்பொடு பொருதுகளம் சிவப்ப
வண்மை எயினன் வீழ்ந்தென ஞாயிற்று
ஒண்கதிர் உருப்பம் புதைய வோராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
விசும் பிடைத் தூர ஆடி;

அகம்—181 (4-10)
பரணர் பாடல்

வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை இயல்தேர் மிஞிலியொடு
நண்பகலுற்ற செருவில் புண்கூர்ந்து
ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்கு
அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று
ஒண்கதிர் தெறுஅமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்து
உருவினை நன்னன் அருளான் கரப்பப்
பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்
குரூஉப்பூம் பைந்தார் அருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு......

அகம்—208 (5-18)
பரணர் பாடல்

பொலம்பூண் நன்னன் புன்றுடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்சல் என்ற ஆஅய் எயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன்னுயிர் கொடுத்தன்ன......

அகம்—396 (2-6)
பரணர் பாடல்

## கோசர் நறுமா அழித்த செய்திகள் :

...நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே

குறுந்தொகை—73
பரணர் பாடல்

இன்கடுங் கள்ளின் அகுதை தந்த
வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசில் மானப்
பிறிதொன்று குறித்ததவன் நெடும்புற நிலையே.

குறு—298(5-8)
பரணர் பாடல்

## 9. வஞ்சினம் காத்தோன்

அன்னி மிஞிலிக்காகப் போரிட்ட திதியனைப் பற்றிய செய்திகள் காணப்பெறும் செய்யுட்கள்:

—தந்தை
கண்கவின் அழித்ததன் தப்பல் தெறுவர
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்று முரண் போகிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்.

அகம்—196 (8-12)
பரணர் பாடல்

முதைபடு பசுங்காட்டு அரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்
இடுமுறை நிரம்பி யாகுவினைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயறு புக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்
கலத்தும் உண்ணாள் வாலிதும் உடாஅள்
சினத்திற் கொண்ட படிவம் மாறாள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற்கு உரைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டு சினம் மாறிய
அன்னி மிஞலி...

அகம் 262 (1-12)
பரணர் பாடல்.

புன்னையின் அழிவு குறித்தன.

அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிய
புன்னை குறைத்த ஞான்றை...

அகம்- 45 (9-11)
பாடல்.

பயங்கெழு வைப்பிற் பல்வேல் எவ்வி
நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான்
பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்
திதியனொடு பொருத அன்னிபோல
விளிகுவை கொல்லோ?

அகம்—126 (13-17)
நக்கீரர் பாடல்.

அன்னி குறுக்கைப் பறந்தலைத் . . யன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிய
நன்னர் மெல்லிணர்ப் புன்னை போல...

அகம்—145 (11-13)
கயமனார் பாடல்.

எவ்வியைக் குறித்தன :

ஓம்பா ஈகை மாவேள் எவ்வி.

புறம்—24 (18)
மாங்குடிகிழார் பாடல்

எவ்வி தொல்குடிப் படீஇயர் மற்றிவர்
கைவண் பாரி மகளிர். புறம்—202 (14, 15)
கபிலர் பாடல்

பயங்கெழு வைப்பிற் பல்வேல் எவ்வி

அகம்—126 (13)
நக்கீரர் பாடல்.

யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய் வாள் எவ்வி.

அகம்—266 (10-11)
பரணர் பாடல்.

எவ்வி இழந்த வறுமையர் பாணர்

குறு—19 (1)
பரணர் பாடல்.

இரும்பாண் ஒக்கல் தலைவன் பெரும் பூண்
போரடு தானை எவ்வி

புறம்—233 (5-6)
வெள்ளெருக்கிலையார் பாடல்

திதியனைப் பற்றியன :

முன் அன்னிமிஞிலி பற்றிய பகுதியிற் சில காட்டப் பெற்றன. இவன், இறுதியில் தலையாலங்கானத்து நெடுஞ் செழியனால் அழிக்கப் பெற்றவன் என்பர்.

களிறு கண் கூடிய வாள்மயங்கு ஞாட்பின்
ஒளிறுவேல் தானைக் கடுந்தேர்த் திதியன்

அகம்—33 (11-12)
மாமூலனார் பாடல்.

பாணர் ஆர்ப்பப் பல்கலம் உதவி
நாளவை இருந்த நனைமகிழ் திதியன்

அகம்—33 (11-12)
மாமூலனார் பாடல்